*Kumaraṉ*

*Āram 7, muttu 45*

*July 03, 1930*

Record no. 313

Reg. No. M. 1823. 20 பக்கங்கள். விலை 0-1-6.

# குமரன்

The "KUMARAN" Published Every Thursday.

ஆரம் எ } காரைக்குடி பிரமோதூத ஞு ஆனி-மீ ௧௯ உ வியாழக்கிழமை (3—7—1930.) { முத்து ௨௮

வாரப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரு. ௩-0-0
ஆறு மாதம் ௧-௮-0
பிரதி ௧-க்கு 0-௧-௧
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரு. ௪-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரு. 0-௧௨-0
வெளிநாடு வருடம்
ஒன்றுக்கு ௧-0-0
ஆடி மீ வருடாரம்பம்

"கதரே உயிர்" "கருணையே தெய்வம்,"

## லாலுகுடித் தாலுகா இரண்டாவது சுயமரியாதை மகாநாடு.

சென்ற ஞாயிறன்று லாலுகுடி நகர் கிராமத்தில் கூடிய மகாநாட்டின் வரவேற்புக்கழகத் தலைவர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் சொற்பொழிவின் சில பகுதி வருமாறு:—

பெரியோர்களே! அன்பர்களே!

எங்களுடைய தாழ்மையான அழைப்பிற்கிணங்கி, உள்ளத்திற் தோன்றுகின்ற உணர்ச்சியோடும், அன்போடும் ஒருங்குசேர்ந்து இம்மகாநாட்டிற்கு வந்து, பெருமைப்படுத்திய உங்கள் அன்பின் அருமை போற்றற்குரியதாகும். அதற்காக இத்தாலுகா வாசிகளின் சார்பாகவும், வரவேற்புக் கழகத்தின் சார்பாகவும் உங்கள் அனைவர்க்கும் வந்தனமும், வாழ்த்தும், வரவும் கூறுகின்றேன். உங்கள் வரவு நல்வரவாகுக!

### முறை.

சென்ற முதல் மகாநாடு லாலுகுடியில் உயர்திருவாளர். P. T. ராஜன் B. A. (Oxon) அவர்கள் தலைமையில் மிகச்சிறப்பாக நடந்தேறியபொழுது அடுத்த இரண்டாவது மகாநாட்டை இந் 'நகர்' வாசிகள் மிக்க அன்புடன் தங்கள் கிராமத்திற்கு அழைத்தார்களென்பதை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்களென எண்ணுகின்றேன். அதன்படி, முறையாக, இன்று, இவ்வூரில், இந்த இரண்டாவது மகாநாடு இனிது நடைபெறுகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் தங்கட்கு அறிவித்துக் கொள்ளுகிறேன்.

### சுயமரியாதை.

'சுயமரியாதைச் சங்கம்' என்பது ஓர் வடமொழிச் சொற்றொடர். தனித் தமிழில் மொழி பெயர்த்தால் 'தன்னுரிமை இயக்கம்' என்றாகும். ஒவ்வொரு மனிதனும் தனக்கும், தனது அறிவிற்கும் உரிமையுடையவனாக விருக்க வேண்டுமென்பதே இவ்வியக்கத்தின் முக்கிய நோக்கமாகும். தன்னையும், தனது அறிவையும் பிறருக்காவது, பழக்கத்திற்காவது, வழக்கத்திற்காவது அடிமைப்படுத்துபவர்களெல்லாம் சுயமரியாதை அற்றவர்களாவர்கள். தனக்கும், தனது அறிவிற்கும் உரிமை கொடுப்பவர்கள் யாவரும் சுயமரியாதை உள்ளவர்களாகக் கருதப்படுவார்கள் என்பதே இதன் விரிவான விளக்கமாகும்.

### எதிர்ப்பு.

நமது இயக்கத்திற்கு பணக்காரர்களாலும், பதவியாளர்களாலும், பண்டிதர்களாலும், பார்ப்பனர்களாலும், அரசாங்கத்தினர்களாலும், ஆதீனத்தார்களாலும், சைவர்களாலும், சாஸ்திரிகளாலும், சாதிவெறி கொண்டவர்களாலும, சமயப்பித்து கொண்டவர்களாலும் கிடைக்கின்ற எதிர்ப்பு கொஞ்சமல்ல. முடிவாகக் கூறுமிடத்து இந்தியாவிலேயே இதுகாறும் தோன்றி மறைந்தும், தோன்றி இருப்பதும், இனித் தோன்றுவதுமாகிய எந்த இயக்கத்திக்கும், இல்லாததும், இருக்க முடியாததுமான எதிர்ப்புகள் நம்முடைய இயக்கத்திற்கு தோன்றியிருக்கின்றன!

நாம் இத்தகைய எதிர்ப்புக்களை அன்போடும், ஆவலோடும் வரவேற்கிறோம். உண்மையும், வீரமும், தைரியம் நிறைந்த பொறுமையும் உள்ள எக்கூட்டத்தினரும் எதிர்ப்புக்களுக்குக் கூறுவது நல்வாவுதான். எதிர்ப்பும்,முட்டுக்கட்டையுமின்றிஎந்த இயக்கமும் இதுவரை வெற்றியடைந்தது மில்லை; அடையப் போவதுமில்லை. சுயமரியாதை இயக்கம் இதுவரை அடைந்த வெற்றிக்கு எதிர்ப்புகள்தான் போதாவாக விருந்தன. ஒரு மேசையின் மீது சில விதைகள் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். மக்கள் அதைக் கருதாமலும், தொடாமலும் இருந்தால் அவை நெடுங்காலமிருந்து பட்டுப்போகும். ஆனால் அதன்மீது பொறுமையும், பயமுங்கொண்டு குழி தோண்டிப் புதைத்து விட்டால் அது அழிந்து போவதில்லை அதற்குப் பதிலாக அது பூமியின் எதிர்ப்பைப் பிளந்து முளைகொண்டு மேலே எழும்பும். இது கற்பனையன்று; உண்மை. ஆகவே எதிர்ப்புக்களுக்கு இதுகாறும் அஞ்சியதுமில்லை, அஞ்சப்போவதுமில்லை, அஞ்சவருவதுமில்லை. அதற்கு மாறாக, அஞ்சுகிறவர்கட்கு ஆறுதல் கூறி, ஆதரவு கொடுக்க சுயமரியாதை இயக்கம் எவ்விடத்திலும், எக்காலத்திலும் தயாராயிருக்கின்றது என்பதை எதிரிகளுக்கு இனிய மொழியிற் கூறுகின்றோம்.

### பார்ப்பனரல்லாதாரியக்கம்.

இவ் வியக்கத்தைத் தோற்றுவித்த பெரியார்களின் உள்ளக்கிடக்கைக்கு மாறாக நடக்கவேண்டிய நிலைமை இக காலத்தில் தோன்றிவிட்டதாக தற்காலத் தலைவர்களிற் பலர் எண்ணுகிறார்கள். பார்ப்பனர்களைபார்ப்பனரல்லாதார் இயக்கத்திற் சேர்த்துக் கொள்ளலாமென சென்னையிற் கூடிய நிறைவேற்றற் கழகத்தில் முடிவு செய்துவிட்டார்கள். அது தஞ்சை மகாநாட்டில் நிறைவேற்றிய பிறகே அமுலுக்கு வருமென்றும் அறிவிக்கப் பெற்றிருக்கிறது. ஆனால், அவர்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டிய அவசியமும், அவசரமும் இன்னது எனப் பொது ஜனங்களுக்கு இதுகாறும் எந்தத் தலைவர்களும் எழுத்துமூலமாவது, சொல் மூலமாவது அறிவிக்கவேயில்லை. பொது ஜனங்கள் தலைவர்கள் மீது குறைகூறுவதானால், அது இக்குறையாகத்தான் இருக்கவேண்டும்.

பார்ப்பனல்லாதார் இயக்கத்தில் பார்ப்பனர்களைச் சேர்த்துக்கொண்ட பிறகு "பார்ப்பனல்லாதார் இயக்கம்" என்ற பெயர் குறுகுமா? வளருமா? இருக்குமா? அழியுமா? என்ற கேள்விகளுக்கு இதுகாறும் பதிலே இல்லை. ஆகவே இம்மாதிரியான மௌனப் புரட்சியைக்கண்டு மக்கள் கலக்கமடைவது இயல்புதான். என்றாலும், பார்ப்பனல்லாதார் இத் தீர்மானத்தை தஞ்சை மகாநாட்டில் வரவேற்கிறார்கள். வரவேற்பதின் நோக்கம் தீர்மானத்தை நன்கு ஆராய்ச்சி செய்து, நிலைமையை உள்ளபடி உணர்ந்து "நன்மை உண்டு" என்று தெரியுமானால், தலைகொடுக்கவும்; "தீமையுண்டு" என்று தெரிந்துவிட்டால் உயிர்கொடுக்கவுமேயாகும்.

### தருமம்.

செல்வாக்குள்ள ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கு மட்டும் கொடுப்பதே தர்மம் என்றும், மோட்சம் என்றும் கூறப்படுகிறது. உடுக்க உடையும், உண்ண உணவும் இல்லாத ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கு கொடுப்பது அதர்மம் என்றும், பாவம் என்றும் கூறப்படுகிறது. அங்கப்பழுது இல்லாதவர்களும். உழைத்து உண்ண வலிமையுள்ளவர்களுமாகிய ஒரு கூட்டத்திற்கு சோறு போடவும், தின்றதும் இளைப்பாறத் திண்ணைகளும் அடங்கிய கட்டிடங்கள் பல பலரால், பலவிடங்களில்கட்டப்பெறுகின்றன. நொண்டி, முடம், கூன், குருடுகளுக்கு இவ்வாறு ஒன்று நமது நாட்டில் இருப்பதாக நினைத்துக் கொண்டே படுத்து உறங்கினாலும் கனவுகூட காண முடியவில்லை. அன்பர்களே! இவையாவும் தர்மம் என்று கூறுவது பெருந்தவறு. தர்மம் அல்லது அதர்மம் என்பதே சாலச்சிறந்தது. கரிய நிறமுள்ள ஆடுகளை 'வெள்ளாடு' என்றும் கொடிய விஷமுள்ள பாம்பை 'நல்லபாம்பு' என்றும் கொள்ளைக்கண்ணனை 'நல்லகண்ணு பிள்ளை என்றும், எருமை காதனை 'அருமை நாதன்' என்றும் பணமில்லாத பெண்ணை 'லக்ஷிமி' என்றும், படிப்பில்லாத பெண்ணை 'சரசுவதி' என்றும் உண்மைக்குமாறுக்க் கூறுவது போலவே அதர்மத்தையும் தர்மம் என்று கூறியும், செய்தும் வருகிறோம். உண்மையான தர்மம் என்று ஒன்றிருக்குமானால், அது நாட்டில் கல்வியை வளர்ப்பதும், கைத்தொழிலை வளர்ப்பதுமேயாகும் என்பதை உறுதியாகக் கூறலாம்.

### தீண்டாமை.

தீண்டாமை என்பது இத்தாலுகாவில் மிக அதிகமாகத் தலைவிரித்தாடுகிறது. மனிதனுக்கு மனிதன் ஒன்று சோமல் பிரித்து வைப்பதில் தீண்டாமை தலை சிறந்தது. பார்ப்பனர்களும் நமபோன்ற மனிதர்களே! அவர்கள் நம்மைவிட எவ்வகையிலும் உயர்ந்தவர்களல்ல என்பதை ஒப்புக் கொள்ளுபவ நீண்டாதாரும் நம்மவர்களே, அவர்கள் நம்மைவிட தாழ்ந்தவர்களல்லவென்பதை ஒப்புக்கொள்ள மறுக்கிறார்கள் நம்முடைய தலையில் காலைவைக்க யாருக்கும் உரிமையில்லை என்று கூறிக்கொண்டே பிறருடைய தலையில் காலை வைக்க விரும்புகிறவர் நமது தாலுகாவில் பலர் உண்டு. நாட்டில் சமத்துவமும், சகோதரத்துவமும் பரவ வேண்டுமானால், தீண்டாமை அடியோடு ஒழிக்கப் பெற வேண்டும். தீண்டாமை இந்நாட்டில் இருக்க வேண்டுமானால், இருக்கட்டும். ஆனால், அது நெருப்பினிடத்தும், மின்சார சக்தியினிடத்துமட்டுமே இருக்க வேண்டும். அதைவிட்டு மனிதனுக்கு மனிதன் தீண்டாமை கையாளப்படுமானால் அது வேரோடு அழிக்கப்பட வேண்டியதுதான். தீண்டாமையில் தீமை இருக்கிறதே தவிர நன்மையென்பதில்லை. இது நானாகக் கூறவில்லை. அச்சொல்லின் முதலும் முடிவும் (தீ * * மை) தீமைதான். தொடக்கத்தில் தீண்டாமை என்ற சொல்லை அமைத்தவர்கள் அறிந்தோ அறியாமலோ இதையும் உள்வைத்து அமைத்துவிட்டார்கள். தீண்டாமையில் தீமை இருக்கிறது என்பதை அறிந்தும், மறுபடியும் தீண்டாமை கையாளப்படுமானால் அது நமது கேடு காலத்தின் அறிகுறி என்பதற்கையமேயில்லை. இத்தாலுகாவிலுள்ள நாட்டுப்பற்றுள்ள பெரியார்கள் பலர்கூடி இக்கொடிய தீண்டாமையை அறவே ஒழிக்க முடிவு கட்டியுள்ளார்கள் என்பதை தங்கட்கு மகிழ்ச்சியோடு அறிவித்துக் கொள்ளுகிறேன்.

### சாதி.

மநுநீதியிற் கூறியபடி ஆதியிற் பிரிக்கப்பெற்ற பிர்ம்ம, க்ஷத்திரிய வைசிய, சூத்திரர் என்ற நான்கு சாதி, ௪0 ஆகி, ௪00 ஆகி ௪000-ம் ஆகமுடிந்துவிட்டதாய் சைமன் கமிஷன் அறிக்கை செய்திருக்கிறது. அவர்களால் சாதிகளின் கிளைகளும், கிளைகளின் பிரிவுகளும், பிரிவுகளின் உட்பிரிவுகளும், உட்பிரிகளின் உட்பிரிவுகளும், அறிய முடியவில்லை. அறிந்திருந்தால் ௩௩-க் கோடிமக்களுக்குள்ளே ௩௩-க்கோடி சாதிகளிருப்பதை அறிக்கையில் குறிப்பிட்டிருக்க முடியும். இப்பிரிவினைகளினால் விளைந்த பலன் என்ன வென்றால், ஒற்றுமை குலைந்தது, வேற்றுமை விளைந்தது, பொறுமை பூத்தது, கலகம் காய்த்தது. அடிதடி பழுத்தது என்றே பலன்களைக் கூறவேண்டும். எது இந்நாட்டைப் பாழாக்கியது என்றால் 'சாதி என்பதைத்தவிர வேறு கூறுதற்கில்லை, ஆகவே, இச்சாதிப் பிரிவினைகளை ஒழிப்பதில் நம்மவர்கள் முழு கவனத்தையும் செலுத்துதல் வேண்டும்.

## நாராயண குருவின்

# ஜீவிதசரித்திரம்.

(இ. சிவம்.)

அத்தியாயம். ௩.

திருவாங்கூர் ஜாதிபேதம் என்னும் கொடிய அரக்கன் பிறந்து வளர்ந்து நடனம் புரியும் ஓர் நாடு என்பது முன் விளக்கப்பட்டதன்றோ? இவ்வரக்கன் மனித வாழ்க்கையின் எல்லா விலாக்காவையும் கைப்பற்றியிருக்கின்றான். இவனுக்கு தாழ்த்தப்பட்ட வகுப்பாரை எப்போதும் தாழ்த்திக்கொண்டேயிருக்கவும், கல்வியில்லாரை அஞ்ஞானத்திலேயே ஆழ்த்திக்கொண்டிருக்கவும், பலமற்றோரை எப்போதும் பலவீனராகவே செய்துகொண்டிருக்கவும் சாலவும் ஆசையுண்டு. இதுகாலை ஆங்காங்கு அவன் அனுவளவு தாக்கப்படுகின்றானென்றாலும் முன் நாளையில் அரசன்முதல் ஆண்டிவரையிலும் அவ் வரக்கனுக்கு உதவி செய்துவந்தார்கள் எனவே தீண்டாத வகுப்பாருக்கு கல்விஞானம் பெறத் தினைத்துணையும் வழியேற்பட்டதில்லை. ஆதல்பற்றி மாடனாசான் ஒப்பாரு மிக்காருமற்ற புத்திசாலியென்று எண்ணிவந்த தம் நாணுவுக்கு கல்வி போதிக்க சௌகரியமில்லையே என்று மிகவும் கவலைப் பட்டுக்கொண்டிருந்தார். அப்படி இருக்கும்போது நாமேற்கூறிய செம்பழந்திப் பிள்ளையின் குடும்பத்தைச் சேர்ந்தவரென்றெண்ணப் படுகின்றவோர் சோதிடர் நாணுவிற்கு கல்விபோதிப்பதாக ஒப்புக்கொண்டார். ஆகவேநாராயணர் ஜோதிடரிடம் அனுப்பப்பட்டு மலையாளம் சமஸ்கிருதம் இவ்விரண்டும் முறையே போதிக்கப்பட்டார். ஜோதிடரிடம் கல்விப் பயிற்சி ஒருபால் நடந்துவர மாடனாசானும் கிருஷ்ண வைத்தியரும் இன்னொருபால் அமரகோசம் (வடமொழி நிகண்டு) சித்த ரூபம் (ஓர் வடமொழி இலக்கண நூல்) என்ற நூல்களை பயிற்றிவந்தார்கள். நாள் செல்லச் செல்ல நாணுவின் கல்வியறிவு மிகுந்துகொண்டு வரவே, அவர் தன்னொப்பரிய மதி நுட்பத்தாலும் ஞாபக சக்தியாலும் கோமள சரீர காந்தியாலும் எல்லோரிதயங்களையும் கவர்ந்தார். அதன் பயனாக மாமனாரிதயத்தில் எவ்விதமேனும் தன் மருமகனுக்கு நன்றாய் கல்வி போதிக்க வேண்டுமென்ற ஆசை பிறந்தது. எனினும் அக்குழந்தைப் பருவத்தில் அவரை வெளியே அனுப்பப் போதிய தைரியம் வரவில்லை. ஆகையினால் நாராயணர் செம்பழந்தியில் கல்வி முடிந்ததும் நீண்ட காலம் தம் குடும்ப வீட்டிலேயே வசிவாராயினர். இக்காலம் நாராணரின் ஜீவிதத்தில் மிக முக்கியமான தொன்றாகும். ஏனெனில் பிற்காலத்தில் அவருக்கு அருந் துணையாய் நின்ற பற்பல கலைகளைப் பயில இக் காலம் இடமளித்தது. நாணு கிருஷ்ணன் வைத்தியன் என்ற தன் மாமனிடமிருந்து மருத்துவமும் சிறிதே சரீர மர்ம அறிவும் கற்றுக்கொண்டார். அன்றியும் தனக்குப் பொருள் விளங்கும் வடமொழி நூல்களையெல்லாம் மனனமும் செய்யலானார். இங்ஙனம் கல்வி பயில்வதில் செலவிட்டதுபோக எஞ்சிய சமயத்தை மாடனாசனோடு சென்று கிருஷித் தொழில் பார்ப்பதில் செலவிட்டார். நாம் குறிப்பிடுகின்ற காலத்தில் செம்பழந்தியில் முக்கியமான பயிர், வெற்றிலையும், கம்புக் கிழங்குமாம். இவ்விரண்டும் நட்டு வளர்த்துவதில் நாராயணருக்கு மிக்க அனுபவமும் சாமர்த்தியமுமுண்டு.

இவ்வாறு காலமெல்லாம் வடமொழிபயில்வதிலும் கிருஷி செய்வதிலும், மருத்துவம் சரீர மர்மம் இவைகற்பதிலும் சென்று கொண்டிருக்கும் போது ஒரு நாள் கிருஷ்ணன்வைத்தியனுக்கு ஓர் கடிதம் கிடைத்தது. இக்கடிதம் வடமொழியில் சுலோகங்களாக எழுதப்பெற்றிருந்ததனால் வைத்தியர் அதனை திருப்பித் திருப்பிப்படித்துப பார்த்தும் பொருள் விளங்கவில்லை. ஆகவே தம் மருமகனை அழைத்து அக்கடிதத்தைப் படித்து பொருள் தரும்படிக் கேட்டார். நாராயணர் கிஞ்சித்தும் ஆலசியமின்றி அதனைவாசித்து பொருள் கூறினர்.

இந்நிகழ்ச்சி வைத்தியருக்கும் மாடனாசானுக்கும் அளப்பரிய மகிழ்ச்சியை அளிக்கவே இருவரும் நாணுவை எவ்விதமேனும் உயர்தரக் கல்வி பயிற்ற வேண்டுமென்று உறுதி செய்தார்கள். அப்போது கருநாகப்பள்ளித்தாலூகா (North Travancore) விலுள்ள புதுப்பள்ளி என்ற இடத்திற்கு பல மாணவர்கள்கல்வியை நாடிச்சென்றுகொண்டிருந்தார்கள். ஏனெனில் தீண்டாமை நெருங்காமை ஜாதி பேதம் என்கின்ற பைத்தியங்களிலிருந்து நீங்கிய இராமனுசானென்ற ஒரு ஆசிரியர் எல்லோருக்கும் சமமாக கல்விபோதிக்க சம்மதித்திருந்தார். ஆகவேமாடனாசானும் கிருஷ்ணன் வைத்தியரும் சந்தோஷத்தோடு நாணுவையும் அங்கே அனுப்பினார்கள்.

கருநாக பள்ளி ஈழவர்கள் மிகுந்த ஜாதியபிமானமுடையவராவர். இவர்கள் அவ்விடம் போகின்ற எல்லா ஈழவமாணவர்களையும் தகுந்தவாறு உபசரித்து தங்கள் தங்களில்லங்களில் வைத்துக் கொள்வது வழக்கம். இவ்வழக்கத்திற்கேற்ப, நாராயணர் வாரணப்பள்ளி என்ற வீட்டில் இடங்கொடுக்கப்பெற்றார். வாரணப்பள்ளி ஓர் பெரிய தனவந்தருக்குச் சொந்தமானதாகும். இவ்வீட்டிலுள்ள பணிக்கர் இலக்கிய இலக்கணஞானமிக்கவரும் கல்வியின் மாட்டு ஆர்வமிக்க வருமாவர். இவர் இராமனுசானிடம் கல்விப்பயிற்சிக்காய் வருகின்ற எல்லா மாணவர்களையும் தம்மில்லத்தில் இடையிடையே கூட்டி வைத்து இலக்கியச் சுவையுடைய பிரசங்கங்கள் புரியச் சொல்வார். அப் பிரசங்கங்களில் ஏதேனும் வழுக்கள் காணப்படுமாயின் அவற்றை ஆசானிடம் எடுத்துக் கூறி திருத்தும்படி கேட்டுக் கொள்வார். இவ்வித இலக்கியக்கழகம் நீண்ட நாளாக வாரணப்பள்ளியில் நடந்துவரும் போது அக்கழகம் 'பண்டிதர் குழாம்' என்று அழைக்கப்பட்டது நமது நாணு இக்கூட்டத்தில் எப்போதும் ஆஜராயிருந்தாரானாலும் அவர் போய் வந்தது மிகவிந்தையானதாகும். எல்லா மாணவர்களும் ஒருங்கு சேர்ந்து பற்பலவாறு வாதம் புரிந்து சொற்பொழிவு நடத்துகையில் அவர் ஓர் மூலையில் பதுங்கியிருந்து அமைதியாய் அங்கு நிகழ்கின்ற யாவற்றையும் கேட்டுக் கொண்டிருப்பார். ஒரு தடவையாவது பண்டிதர் குழாத்தில் நாராயணர் வாய்திறந்ததாய் தெரியவில்லை. இதனைக் கண்ட பள்ளித் தோழர்கள் வேடிக்கையாய் போலிச் சன்னியாசியென்று நாணுவுக்குபெயர் வைத்தார்கள். எவர் என்னகூறினாலும் சற்றும் பொருள்படுத்தாது நாணு தம் மனப்படியே நடப்பாராயினர். இத்தகைய எதற்குமஞ்சாத அருங்குணமே - விஷயங்களை அமைதியுடன்கேட்டறியும் பெருங்குணமே—பிற்கால உயர்வுக்கு பெரிது முதவிற்று என்னலாம்.

நாராயணருக்கு இலக்கணம் கற்பதிலும் புராணங்கள் படிப்பதிலும் ஆசையதிகம். ஆனால் இராமனுசானிடமிருந்து தினைத்துணையும் இலக்கணம் கற்றுக் கொள்ளமுடியவில்லை. ஏனென்றால் வடமொழி தேவர்கட்குரிய பாஷையென்றும், அதிலுள்ள இலக்கணத்தை சூத்திரர்கட்குஉபதேசிக்கலாதென்றும் ஆசான் எண்ணியிருந்தார். புராணங்கள் பல பயிற்றப்பட்டன. ஆதி காலத்தில் நாணு இப்புராணங்களில் என்னென்னமோ பொக்கிஷங்களிருப்பதாய் எண்ணியிருந்ததால் அவர் இராமாயணம் பாரத முதலிய இதிகாசங்களை பல முறை வாசித்து முடித்தார். மகாவிஷ்ணுவின் மாட்டு அளப்பரிய பக்தியிருந்ததாகவும் எப்போதும் இராம நாமத்தை ஜபித்துக்கொண்டிருந்ததாகவும் ஓர் மலையாள ஆசிரியர் எழுதுகின்றார். இதனை வாசகர்கள் கவனத்தில் வைத்து நாளேற ஏற நாணுவின் மனப்பான்மை எவ்வாறு மாறி முடிவில் அன்பே கடவுள் என்று கணிகின்றாரென்பதை உணர வேண்டும்.

நாணு ஓர் உத்தம மாணவனும் ஆசான் கூறுவது எதுவாயினும் அமைவுடன் கேட்டு தம் மனத்தில் புகைப்படமெடுத்தாற்போல்பதித்துக் கொள்ளுபவருமாவார் பாடங்கேட்குங் காலங்களில் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் அமைதியுடனு மிருந்து தன்னாசிரியன் கூறுவதை கவனமாய்க் கேட்பார். முதலாவது கொஞ்சநாள் இராமனுசானுக்கு நாணுவின் பாடங் கோடலைப்பற்றிசச்ந்தேகம் இருந்தது. ஆனால் கொஞ்ச நாட்கட்குப் பின்பு ஆசான், நாணுவின் மதிநுட்பத்தையும், அமைதியையும், ஒழுக்கத்தையும் வெகுவாய் புகழலானார். வகுப்பின் மாணவர்களிருக்கும்போது ஆசான் ஏதேனுமொரு வினாவை விடுத்து விடையை எதிர்பார்த் திருந்தால் மகா சாமர்த்தியசாலிகள் போல் தோற்றிய எல்லா மாணவரும் வாய்திறவாது நின்றாலும் நாணு ஒருபோதும் விடையிறுக்கத் தவறியதில்லை. ஆகவே கொஞ்சநாட்களுக்கப்பால் ராமனுசான் கற்பித்த யாவும் நாணு அறிவார் என்று எல்லோரும் எண்ணலானார்கள். இங்ஙனம் கல்வியில் வல்லவராயிருந்ததுபோலவே ஆசானிடம் அன்புசெலுத்துவதிலும் நாணு பின்போகவில்லை. ஆசானை தந்தைபோல் பக்தியுடனும் அன்புடனும் போற்றி வந்தார்.

——





# ஓர் பொதுக் கூட்டம்.

## திரு. ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரின் அக்கிராசனப் பிரசங்கம்.

(சென்ற வாரக் குமரனில் பிரசுரஞ் செய்யப்பட்டிருக்கும் பொதுக் கூட்டத்தில் நடந்த பிரசங்கங்களின் முழு விவரம் வருமாறு:—)

மாலை ௫ மணிக்குக் கூட்டம் கூடியவுடன் திரு. ராமசுவாமி ஐயரவர்கள் (தமிழ்ப் பண்டிதர்) எழுந்து அக்கூட்டத்திற்குத் தலைமை வகிக்க எவ்வகையிலும் தகுதியுடையவர் ஆவி.பழ.சிதம்பரம் செட்டியாரே என்றும், அவர் தானங்களிலெல்லாம் தலைசிறந்ததாகிய கல்வி தானத்தை வழங்கியிருக்கின்றாரென்றும் யூனியன் போர்டு, முனிசிபாலிடி இவற்றில் தலைமை வகித்து மிகத் திறமையாக நடத்தி வந்திருக்கின்றாரென்றும் ஆகவே பிரஸ்தாப கூட்டத்திலும் அவர் தலைமைவகித்தல் அமைவுடைய தாகுமென்றும் பலபடப் புகழ்ந்து கூறினர். அதனை ஆமோதிப்பதாக கனம். சித. நா. நாராயணன் செட்டியாரவர்கள் மொழிந்தனர். அப்பால் தலைவர் கரகோஷத்தி னிடையே தம் ஆசனத்தை யடைந்து பேசியதாவது:—

இன்று இங்கு கூடியிருக்கும் கூட்டத்தின் நோக்கம் அனைவரும் அறிந்த விஷயமே. சுயராஜ்யத்தை சீக்கிரத்தில் அடையவேண்டுமென்று நம் தேசத்தாரில் சிலர் சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டு அவர்கள் செய்யும் அநீதியான நடவடிக்கைகள் முற்றிலும் தவறுதலென்றும், அவைகள் நம்மால் கண்டிக்கத் தக்கவைகள் என்னும் அபிப்பிராயத்தையும், ரவுண்டுடேபிள் கான்பரன்ஸ் அதாவது சர்வகட்சி மகாநாட்டை சீக்கிரத்தில் கூட்டிவைத்து அதில் நாம் எல்லோரும் கலந்துகொள்ளவேண்டும் என்னும் அபிப்பிராயத்தையும், வெளியிடுவதற்காக நாம் கூடியிருக்கின்றோம். இந்தக் கூட்டத்திற்கு என்னைத் தலைமை வகிக்கும்படி கேட்டுக் கொண்டதற்கு நான் மிகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். படிப்பிலும் யோக்கியதையிலும், பதவியிலும் என்னைக்காட்டிலும் மேலோர் அநேகர் இங்கே விஜயம் செய்திருக்க நான் இந்த தலைமையை வகிக்க தகுதியற்றவன் என்பது என் அபிப்பிராயம். ஆயினும் தற்காலத்தில் உள்ள சட்டமறுப்புக் குழப்பம் நமக்கு முடிவில் மிகக் கெடுதல் என்னும் எண்ணம் எனக்கு தீவிரமாக இருப்பதாலும், சர்வகட்சி மகாநாட்டால் அநேக நன்மைகள் நமக்கு விளையும் என்பது என் பூரண நம்பிக்கையானதாலும், இந்த எண்ணங்களை என்னால் முடிந்தமட்டும் வெளிப்படுத்த வேண்டுமென்னும் அவாவால் இந்த தலைமையை நான் வகிக்க உடன்பட்டேன். ஆகையால் அதே நோக்கங்களுடன் இங்கு கூடியிருக்கும் என் அன்பர்களின் உதவியால் இக் கூட்டதை சரிவர நடத்தி நமதுடைய அபிப்பிராயங்களை செவ்வனே வெளியிடக்கூடுமென்று நான் உற்சாக மடைந்திருக்கிறேன்.

ஆரம்பத்தில் நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். அவைகளை தாங்கள் அனைவரும் தயவு செய்து அங்கீகரிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். முதலாவதாக நமது நாட்டைப்பற்றி கவனிப்போம். ஆங்கிலேயர் நம் நாட்டுக்கு வருமுன்பு நம் நாடு இருந்த நிலைமை அனைவரும் நன்கு அறிந்த விஷயமே. அப்பொழுது இந்தியா தேசம் அநேக சிற்றரசர்களால் ஆளப்பட்டு ஒற்றுமையில்லாமல் அநேக பிளவுகள் பட்டிருந்தது. நம்முடைய தேசத்துக்கும் உயிருக்கும் அபாயம் எப்பொழுதும் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. தற்காலத்தில் நமக்கு உள்ள வசதிகள் யாதொன்றும் முன்பு இல்லை. பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் நமது நாட்டை ஆளத் தலைப்பட்டதுமுதல் நமக்கு அவர்கள் அநேக நன்மைகளை செய்துகொண்டே வருகின்றனர். போக்குவரத்துச் சாதனங்கள் ஏராளமாய் ஏற்பட்டுவிட்டன. மேல்நாட்டிலுள்ள அநேக சௌகரியங்களை யெல்லாம் நாமும் அடைந்து வருகிறோம். படிப்புக்கு ஏராளமான வசதிகள் ஏற்பட்டு, கல்வியிலும் நாடு நாளுக்குநாள் ஓங்கி வருகிறது. காருண்ய கவர்ன்மெண்டார் நமது நாட்டில் அரசியல் சீர்திருத்தங்களை அப்போதைக்கப்போது தக்கவாறு செய்துகொண்டு அரசியல் இயக்கத்தை நமக்கு நன்கு புகட்டி ஆளுந் திறமையையும் நம் அனைவருக்கும் கற்பித்து வந்திருக்கிறார்கள். சுருக்கமாகச் சொல்லில், சுயராஜ்யத்தையே காலக் கிரமத்தில் நாம் அடையக்கூடிய யோக்கியதையையும் நமக்கு அளித்திருக்கின்றனர். ஆனால் இப்பொழுதே சுயராஜ்யத்தை நாம் அடைவது ஆகக்கூடிய காரியமில்லை. இந்தியா ஒரு பெரிய தேசம். சுமார் ௩௦ கோடி ஜனத்தொகையுள்ளது. அதாவது உலகத்திலுள்ள ஜனத்தொகையில் ௫-ல் ஒருபாகம் இந்த ஜனத்தொகையில் இந்துக்கள் முஸ்லீம்கள், பௌத்தர்கள், சீக்கியர்கள், சமணர்கள், கிருஸ்தவர்கள் முதலிய அநேகவித மதஸ்தர் அடங்கியிருக்கின்றார்கள். ஒவ்வொரு மதத்திலும் பெரும்பாலும் இந்துக்களிலேயே அநேக ஜாதி பேதங்கள் இருக்கின்றன. இத்தகைய ஜாதிமத பேதமுள்ள ஒரு பெரிய ஜன சமூகத்தை ஒன்று சேர்த்து சுயராஜ்யம் அடைவது என்பது எளிதான விஷயமா? மேலும் நமது நாட்டில் அநேக சுதேச சமஸ்தானங்கள் வெவ்வேறான சுதந்தரங்களுடன் இருக்கின்றன. ஆகையால் பிரிட்டிஷ் இந்தியாவைக் கொண்டு மாத்திரம் எந்த அரசியல் சீர்திருத்தமும் செய்ய இயலாது. அகில இந்திய அரசியல் அமைப்பில் சுதேச சமஸ்தானங்களைப்பற்றி கவனித்தே சீர்திருத்தங்கள் செய்யவேண்டியிருக்கின்றது. முக்கியமாக சுதேச சமஸ்தானங்களும், பிரிட்டிஷ் இந்தியாவும் ஒத்துழைக்க வேண்டிய பல விஷயங்களில் பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் தலைப்படத்தான் வேண்டும். பிறகு இந்தியாவில் ராணுவ விஷயம் மிகுந்த ஆலோசனைக் கிடமானது. இந்தியாவின் பாதுகாப்பு சம்பந்தமாக நாம் மிகவும் கவலை கொள்ள வேண்டியிருக்கிறது. எல்லைப்புற மாகாணத்தில் ஏற்படும் ஆபத்துக்களைத் தடுக்க தக்க ஏற்பாடுகள் செய்துகொள்ளவேண்டியிருக்கிறது. ஆதலால் இதை நன்கு ஆராய்ச்சி செய்யாது அரசியல் திருத்தம் அவசரத்தில் ஏற்படும் பட்சத்தில் அது இந்தியாவுக்கும், பிரிட்டனுக்கும் ஆபத்தாய் முடியும். கடைசியாக காருண்ய கவர்ன்மெண்டார் தற்காலத்தில் நமக்குக் கொடுத்திருக்கும் அரசியல் உரிமைகளை நாம் செவ்வையாய் நடத்தி வருகிறோமா என்பதே சந்தேகத்துக்கு இடமாய் இருக்கிறது. நகர சபை, தாலூகா போர்டு, ஜில்லாபோர்டு முதலியவைகளின் நிர்வாகத்தில் கவர்ன்மெண்டார் தலையிடுதலின்றி நமக்குப் பூர்ண அதிகாரமுண்டு. இந்த நிர்வாகத்தைக் கூட நாம் சரிவர நடத்த முடியவில்லை. இதில் அநேக கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஒரு நகரசபை அந்த நகரத்தின் நன்மையைச் செய்வதற்கென்றே ஏற்பட்டுள்ளது. இந்த விஷயத்தில் அபிப்பிராய பேதங்கள் சிற்சில சமயங்களில் ஏற்படக்கூடினும், தீவிரமான வித்தியாச மனப் பான்மையோ, கட்சிபேதமோ யாதொன்றும் இருக்க இடமில்லை. ஆயினும் இந்த நகரசபை அங்கத்தினர்களுள்ளேயே அநேக பிளவுகள் ஏற்பட்டு நிர்வாகம் தடைப்பட்டு விடுகிறது. சென்னை ராஜதானியில், ௫-அல்லது ௬ முனிசிபாலிடிகள் தவிர மற்ற முனிஸிபாலிடிகளின் நிர்வாகம் போற்றத்தக்கதாக இல்லையென்பது கவர்ன்மெண்டு ரிப்போர்ட்டாலும், மற்ற ஆதாரங்களாலும், நாம் நன்கு அறிந்த விஷயம். ஊழலான நிர்வாகத்தை சீர்திருத்துவதின் பொருட்டு, சர்க்கார் உத்தியோகஸ்தரை நகரசபையின் தலைவராக நியமித்த இடம் அநேகம். நகரசபை முழுவதையுமே கலைத்து, மேற்படிசபையின் அதிகாரங்கள் அனைவற்றையும் ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தரிடமே கொடுத்து, அவர்மூலம் நிர்வாகத்தை நடத்திய முனிஸிபாலிடிகளும் சில உண்டு. உதாரணமாக இவ்வூர் நகரசபையையே கவனிப்போம். இதில் ௩௬ மெம்பர்கள் உளர். அவர்களில் ௩௬ பேர்கள் ஒரே ஊரார்; ஒரே ஜாதியர்; ஒரேதொழிலாளர்; இவர்களுக்குள்ளேயே ஒற்றுமையில்லாமல், நகர நிர்வாகத்தில் பல விகாரமான சச்சரவுகள் ஏற்பட்டுக்கொண்டு, நகரத்தின் அவசியமான நன்மைகள் செய்யாமல் தடைபட்டு நிற்பது யாவரும் அறிந்த விஷயமே. கல்வி, ரோடு, ஆஸ்பத்திரி, சாக்கடைவசதி, ஜலவசதி, நகரவிரிவு முதலிய அவசிய விஷயங்களில் சிறிதும் புத்தியைச் செலுத்தாமல், அற்ப விஷயங்களில் பெரிய சச்சரவும் கலகமும் தமது நகரச்சபையில் நடக்கவருவது புகழத்தக்கதா? நமது நகரச்சபையின் கூட்டங்கள் நடத்துவதற்கே போலீசாரின் உதவியை தேடவேண்டியதாயிருப்பது எனன மல்லவா? இத்தகைய விஷயங்கள் மிகவும் வருந்தத்தக்கதல்லவா? கேவலம் ஒரு சின்ன நகரத்தின் நிர்வாகத்தில் இவ்வளவு கஷ்டங்கள் இருக்குமாயின், அநேக ஜாதிமதபேதங்கள் கொண்ட இப்பெரிய பூபாகத்தை சுயராஜ்யம் உடனே அடைந்து நாம் ஆள்வதெப்படி? பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரின் பேருதவி நமக்கில்லாமல் எந்த ஆக்ஷியையும் நாம் நடத்த முடியாது. ஆகையால் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் சம்பந்தமில்லாமல், இந்தியாவுக்கு கிடைக்கக்கூடிய எவ்வித ஆக்ஷியையும் நான் கண்டிப்பாய் எதிர்க்கவேண்டியவனாயிருக்கிறேன். குடியேற்ற நாட்டுப்பொறுப்பாக்ஷி கூடியசீக்கிரத்தில் சாதிக்கக் கூடியதே. ஆனால் இதையும் இந்தியாவின் தற்கால நிலைமையை நன்றாய் ஆராய்ச்சி செய்யாது, உடனே அடைவதென்பது எளிதானதல்ல.

இந்தியாவின் நிலைமை இவ்வளவு பிரதிகூலமாயிருந்தபோதிலும், காருண்யகவர்ன்மெண்டார் எப்பொழுதும அரசியல் சீர்திருத்தத்தில் ஈடுபட்டே வந்திருக்கின்றனர். ரிப்பன்பிரபு, மிண்டோபிரபு, மார்லிப்பிரபு முதலிய ஆங்கிலேய துரைத்தனர்கள் இந்தியாவின் நன்மையைக்கருதி அநேக அரசியல் சீர்திருத்தங்கள் அப்போதைக்கப்போது செய்திருக்கின்றனர். ௧௯௧௭ வருஷத்தில் இந்தியாவின் பொறுப்பாட்சி பார்லிமெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்டு அதற்கனுகுணமாக மாண்டேகுபிரபுவும் செம்ஸ்போர்டுபிரபுவும் அநேக சீர்திருத்தங்கள் செய்து அவைகளின் மூலம் இந்தியர்களுக்கு விசேஷமான சுதந்திரங்கள் கிடைத்தன. சுதந்திரங்களை நாம் அனுபவித்த ௧௦ வருஷ காலத்துக்குள் மறுபடியும் நிர்விசாரணைசெய்து இன்னும் ஜாஸ்தியான சுதந்திரங்களைத் தருவதாக கவர்ன்மெண்டார் வாக்களித்தனர். அதன்படியே விசாரணை செய்வதற்காக சைமன் கமிஷன் ஏற்படுத்தப்பட்டது. அதற்கு உதவியாக இந்தியாவிலும், சென்ட்ரல் கமிட்டிகளும், ராஜதானிக் கமிட்டிகளும் ஏற்படுத்தப்பட்டன. சர் ஜான் சைமனும் மற்றமெம்பர்களும் ஒரு வருஷகாலமாக இந்தியாவில் தங்கி, மிகப்பிரயாசையுடன் அநேக இடங்களுக்குச் சென்று ஆங்காங்கு நிர்விசாரணை செய்து, ரிபோர்ட்கள் செய்தாய்விட்டதாகத் தெரிகிறது ரிபோர்ட்கள் வந்ததும் சர்வகக்ஷி மகாநாட்டைக் கூட்டி தீர்மானித்து, குடியேற்றப் பொறுப்பாக்ஷிக்கு வேண்டிய சீர்திருத்தங்கள் செய்ய கவர்ன்மெண்டார் தயாராயிருக்கின்றார். இந்த விஷயத்தில், நமது மாட்சிமை தங்கிய இர்வின் பிரபுவும், பென் பிரபுவும் மிக்க ஊக்கத்துடன் இருப்பது அனைவரும் அறிந்ததே. இது பற்றியே இர்வின்பிரபு, தன் சரீரசிரமத்தைப் பாராட்டாது, இங்கிலாந்துக்குச் சென்று இந்திய மந்திரி முதலியவர்களோடு கலந்து நிர்பேசித்து வந்திருக்கிறார். இந்தியாவினிடத்தும், இந்தியர்களினிடத்தும், இர்வின்பிரபுவுக்கு உள்ள அன்புக்கு எல்லையே இல்லை. நமது நாட்டிலே, நம் இந்தியாவிலேயே, அவர் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டபோதிலும், அவரது உயர்ந்த கொள்கையை விடாமல், எல்லா இந்தியர்களின் ஒத்துழைப்பை நம் நன்மையின்பொருட்டு அவர் இப்பொழுது வேண்டிக்கேட்பது, பாராட்டத்தக்கதல்லவா?

கவர்ன்மெண்டார், நம் விஷயத்தில் இவ்வளவு ஈடுபட்டு இருக்கையில், சட்டமறுப்பு இயக்கத்தில் நாம் நிற்பது தர்மமாகுமா? அது மிக்க அநீதியல்லவா? சட்டமறுப்பால் சுயராஜ்யம் அடைந்த தேசம் ஏதாவதுண்டா? வேதாரண்யத்தில் உப்புக்காய்ச்சுவதால் சுயராஜ்யம் கிடைக்குமென்பது நம்பத்தக்கதில்லை. வரி கொடாமையால் கலகமும் தீமையும், அதிகரிக்கு மேயொழிய, சுயராஜ்ய ஏணியில் நாம் ஒரு படிகூட ஏறமுடியாது. ௧௯௨௧-வருஷத்து சீர்திருத்தங்கள் வந்ததும் நாம் ஒத்துழையாமையில் பிரவேசித்தோமே, அதில் ஏதாவது பலன் கிடைத்ததா? அந்த இயக்கத்தால் ஒத்துழையாமை என்னும் குணம் அநேக வாலிபருக்கு ஏற்பட்டதே ஒழிய, சுயராஜ்யம் வந்தபாடில்லை. ஆதலால் சட்டத்துக்கு விரோதமான காரியங்களை நாம் செய்யமுயலுவது மிகத்தவறு. அதில் நாம் பிரவேசித்தால், பார்லிமெண்டில் நம்முடைய நண்பர்களில் அநேகரை விரோதிகளாக செய்து கொள்ளுவோமேயொழிய, இந்த இயக்கத்துக்காக பயந்து பார்லிமெண்டார் நமக்கு சுதந்திரங்கள் அளிக்கமாட்டார்கள் என்பது திண்ணம். இந்த இயக்கத்தால், நமக்கு கிடைக்கும் சுதந்திரங்கள் தடைபடுமே என்று நான் பயப்படுகிறேன்.

ஆகவே இந்த சட்டமறுப்பு இயக்கத்தை நாம் அறவே ஒழித்து, அனைவரும் ஒற்றுமையை அடைந்து, கவர்ன்மெண்டாருடன் ஒத்து, சர்வகக்ஷி மகாநாட்டில் கலந்துகொண்டு, நமக்கு வேண்டிய சுதந்திரங்களைக் கேட்டுக் கொண்டால், அவைகள் கட்டாயம் நமக்கு கிட்டும் என்பது என் நிச்சயம். ஆகையால் நாம் இப்பொழுது செய்ய வேண்டியது என்னவெனில் சட்டமறுப்பு இயக்கத்தை பத்திரிகைகள் மூலமாயும் கூட்டங்கள் மூலமாயும் கண்டித்து, அவைகளை நிறுத்தவேண்டும். கவர்ன்மெண்டாரிடத்தில் நமக்குள்ள நம்பிக்கையை கைவிடலாகாது. சர்வகக்ஷி மகாநாட்டில் நாம அனைவரும் கலந்துகொண்டு நமக்கு வேண்டிய சுதந்திரங்களை ஏகமனதாய்க்

(௧௬-ம் பக்கம் பார்க்க.)

# புதுக்கோட்டை சட்டசபை.

### நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு இன்றியமையாது வேண்டுவது.

இச்சட்டசபை மூன்று முறையாக நாளிது ௧௯௩௦ ஆகஸ்ட்டில் துவங்கலாம். இதிலிருந்தாவது இச்சபை பெருஞ் சீர்திருத்த மடைந்து, இதர சமஸ்தான ஜனப்பிரதிநிதிகளுக்கு வழங்கியிருக்கும் உரிமைகளை கவர்ன்மெண்டார் பூரணமாய் வழங்கவேண்டும்.

நகரத்தார்கள் நாட்டுக்கோட்டை செட்டிமார் இச்சமஸ்தானத்திற் குட்பட்ட சுமார் இருபத்தொரு (உ௧) ஊர்களிலிருந்து வருகின்றனர். அவையாவும் திருமயம் தாலூகாவையே சேர்ந்தன. புதுக்கோட்டை ஜனக்கணிதம் சுமார் ௪௨௭,000த்தில், குளத்தூர், ஆலங்குடி, திருமயம் தாலூகாவாகப் பிரிக்கப்பட்டு மூன்றிலொரு பாகத்திற்கு மேலான ஜனத் தொகை சுமார் ௧௫0,000-ம் வரை திருமயம் தாலூகாவிலுள்ப்பட்டிருக்கின்றது. சட்டசபை மெம்பர்களாய்த் தேர்ந்தெடுக்க திருமயம் சேகரம் 1 பொன்னமராவதி உகாரையூர் ௩ சேங்கிரை ௪ கிழாநிலை ௫ ஆகப்பிரிக்கப்பட்டு டிவிஷன் (Division) ஒன்றுக்கு இரண்டு பிரதிநிதிகளாகத் திருமயம் தாலூகாவிற்கு பத்து பிரதிநிதிகள் ஏற்படுத்தப்பட்டிருப்பதில் செட்டியார் பொன்னமராவதிக்கு இரண்டும் திருமயத்திற்கு ஒருவரும் சர்க்காரால் (Nomination) நியமிக்கப்பட்டிருப்பவர், திரு தர்மபூஷணம் தி. கா. முத்தய்யா செட்டியாருமாவர். இச்சமஸ்தானத்தில் பெரும்பான்மையும் ரெவனியூ சிவில் கிரிமினல் மற்றவகைகளிலும் பெருந்தொகைப்பணங்கள் சர்க்காருக்குச் செலுத்தி வருகின்றவர்களாவார்கள். இவர்களது நலவுரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ள மேலே சொல்லிய திருமயம் சேகரம் டிவிஷன் ஐந்திலும் நகரத்தார்களில் பலர் அறிவு ஆற்றலுள்ள, பிறர் நலம் பேணும் பெருந்தகையாளராய் இவ்வாண்டு வரும் சட்டசபைக்கு வரவேண்டும். அதனோடு அரசாங்கத்தார் நியமனமும் (Nomination) பெருமைக்கு மாத்திரமின்றிப் பேசுந்தகைமை வாய்ந்த பெரியார் நகரத்தார்களிலிருவரை நியமனம் செய்ய வேண்டும். நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம். புதுக்கோட்டை வாசிகளாகிய நகரத்தார் ஒருங்கே சேர்ந்து தலைநகரில் தலைமை ஆபீசும் மற்ற நகரத்தார் ஒவ்வொரு ஊரிலும் கிளை ஆபீசுமமைக்க வேண்டியது மிக அவசியம். சங்கம் திறவி ஆதரவளித்து நகரத்தார்களுக்குள்ள குறைபாடுகளை அரசாங்கத்தாருக்கு எடுத்துச் சொல்லவேண்டும் நலன்களைப் பெற்றும் சென்னை அரசாங்கத்தில் நம்மவர்க்குச் சங்கச் சார்பில் சட்டசபை ஸ்தானம் பெற்றிருக்குமாப் போல் இங்குமொரு ஸ்தானம் ஏற்படுத்த அரசாங்கத்தாரைக் கேட்க வேண்டும். உலக முன்னேற்றமடையுமிக்காலங்களிற், தமிழ் வேந்தர் ஆட்சிபுரியும் அரசாங்கத்திற் செல்வம் படைத்த நம்மனோர்க்குப் பல சௌகர்யம், வசதியிருந்தும் பிரயோகிக்க வகையறியாது, போடும்வரியைக் கொடுத்துத் தனக்கெனவே வாழ்ந்து காலம் போக்காது உலக நடையை ஆராய்ந்து ஒழுகவேண்டும். சங்கஸ்தாபன நடைமுறைக்கு சொற்ப சந்தா ஏற்படுத்தியும் பலர் கொடுக்கும் நன்கொடையாலும் வளர்ச்சியுறச் செய்து, அதன் வசமாய் அரசாங்கத்தில் நம்மனோர்க்கு ஏற்படும் குறைபாடுகளை நிவர்த்தித்துக் கொண்டு ஏனோரடல்லாத சமூகசீர்திருத்தங்களடைவிப்பதற்கு ஓர் பெரும் நிலையமாயிருக்கும். இச்சமஸ்தான நகரத்தார்களிதையுணர்ந்து கொஞ்சமுங் காலந்தாழ்த்தாது இச் சங்கஸ்தாபனம் செய்யத் தாவுனங் கொள்ளுமாறு வேண்டுகின்றோம்.

சட்டசபை ஸ்தானம் (Division) டிவிஷன் ஒன்றுக்குப் பொதுவாய் இரண்டு மெம்பர்களா ஏற்படுத்தியிருப்பதை, பகுதி அல்லது திசையாகப் பிரித்துத் தனித்தனியே Vote செய்யின் இரண்டு மெம்பர்களுக்குப் பன்னிரெண்டு வட்டங்களில் வோட் பெறுவதைக் காட்டிலும் தனியே ஆறுவட்டங்களில் பெறுவது சுலபமாயிருக்கும். இதை ஆராய்ந்து அரசாங்கத்தார் இம்முறை வரவிருக்கும் சட்டசபைக்காவது இத்தகைய வசதியை ஏற்படுத்துவார்களாக.

(சமூக நலம் விரும்புவோன்.)

# நமது தபால் பெட்டி.

### தேன்மாப்பட்டு.

பிரிவு உபசாரக்கூட்டம்:— உஅ-௬-௩0 ௭-மணிக்கு வைக்கம் வீரர் வாசகசாலையின் கண் இவ்வாசகசாலையின் உபகாரியதரிசியாகிய உயர்திரு. அ. பெரியசாமி அவர்கள் தொழில் முறையை முன்னிட்டுப் பிறநாடு செல்வதால் ஓர் பிரிவு செய்யப்பெற்றது. அவ்வமயம் திரு மு. வெள்ளைச்சாமி அவர்களின் தலைமையில் திருவாளர்களான, ப. சிவானந்தன் சிவசுப்ரமணியன்' மு. கணபதி முதலியோர் பேசினர். நண்பர் பதிலிறுத்தார். அக்கிராசனர் முடிவுரைக்குப்பின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் இரவு அ-மணிக்கு முடிவுற்றது.

### அமராவதிபுதூர்.

மணிமேகலா சங்கம்:—ஆனிமீ" அஉ மணிமேகலா சங்கத்தின் கூட்டம் மாலை ௬-௩0 மணிக்கு ராம வள்ளியம்மையின் தலைமையில் கூடிற்று. அப்பொழுது மாணவிகளும் அவர்களின் தாய்மார்களும் இன்னும் சில பெரியோர்களும் வந்திருந்தனர். தலைவர் முகவுரை முடிந்த பின் மாணவிகள் மு அன்னம், ஆறு. சிவகாமி, வ. வள்ளி, சு. மணிமேகலை, சு சௌந்திரம், ரா. பார்வதி, பெரி. விசாலாட்சி, முதலானவர்கள் ஆடம்பரம் வேண்டுமா வேண்டாமா என்பது பற்றிப் பேசினார்கள். அடுத்தவாரத்தில் சங்கமும் அதன் உபயோகமும் என்பது பற்றிப் பேசப்படும்.

### அரிமழம்.

A. V. ஸ்கூல்:—ஆனி ௧௪-ம்நாள் ௯ மணிக்கு ஷை ஸ்கூலில் புதுக்கோட்டை மன்னர் பிறந்த தினக்கொண்டாட்ட விழா நடைபெற்றது. சிறுவர் சிறமிகளால் இன்னிசையுடன் பாட்டுகள் பாடப் பெற்றதும் டாக்டர் K நாகநாதன் சாகிப் அவர்கள் தலைமை வகித்து இவ்வருடப் பரீட்சையிற்றேறிய மாணவர் மாணவிகட்குப் பரிசுகள் வழங்கினார்கள்.

"ஸ்ரீமீனாட்சி சுந்தர விலாஸ" வாசகசாலை:—ஆனி ௧௨-ம் நாள் மாலை ஐந்து மணிக்கு திருவாளர், மீனாட்சிசுந்தரதீட்சதரவர்கள் தலைமையில் பல மாணவர்கள் உயர்யாசித்தார்கள்.

### கோட்டையூர்

### யூனியன் போர்டு வழக்குகள்.

யூனியன் போர்டு அங்கத்தினர் திரு. ராம. அழ சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் சேர்மன் பேரில் போட்டிருக்கிற இரண்டு வழக்குகளில் இன்ஜங்ஷன் வேண்டுமென்று கேட்டுக் கொடுத்திருந்த இரண்டு மனுக்களும் தள்ளப்பட்டன. வழக்கு நடக்கிறது.

---

## விளம்பரம்.

ஆத்தங்குடி சுப. சித. அள. அளகப்ப செட்டியார்-தகப்பனுரை மிகவுஞ் சிறுவயதில் இழந்து முதிராத அறிவுடைய வாலிபர். அவருக்கு அவசிய ஞாயத்தேவைகளுக்கு அவர் தயார் பெரியாள் ஆச்சி வேண்டியது செய்து வருகிறாள். இந்த நிலையில் அவருக்கு எதற்கும் யாதொரு கடனும் வாங்க எவ்வித அவசியமுங் கிடையாது. அப்படியிருக்கச் சிற்றினத்தான விடர்களின் சிநேகத்தால் சமீபத்தில் அவர் கெட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்குல் நிலைமையில் சிலர்கள் அவரிடம் பேராசையால் கடன் தஸ்தவேஜுகளும், நோட்டு, உண்டியல் முதலானதுகளும் பிரட்டினித்து வாங்கிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகவே ஷை யாரிடம் எவரும் யாதொரு தஸ்தவேஜுகளும் எக்காரணத்தை முன்னிட்டும் எழுதி வாங்கப்படாதென்றும் அப்படி வாங்கியிருந்தாலும் அவைகளுக்குப்பணம் தரப்படமாட்டாதென்றும் இதன் மூலம் அறிவிக்கலாயிற்று.

ஷை பெரியாள் ஆச்சிக்காக
எம். ஜி. குருஸ்வாமி அய்யர்.
வக்கீல்
சிவகங்கை.
24—6—1930









### வட்டமேஜை மகாநாட்டிற்கு மைசூர் திவான்.

வட்டமேஜை மகாநாட்டிற்கு மைசூர் திவான் ஸர் மிர்சா அழைக்கப்பட்டிருக்கிறார். அதை முன்னிட்டு ஜூலை அ-உ சிம்லாவில் கூடும் சாதாரணக் கூட்டத்திற்குச் செல்வார். செப்டம்பர் அ-தேதி இங்கிலாந்துக்குப் பிரயாணமாவார்.

### பஞ்சாப் யுத்த சபை முடிவு.

சுமார் ௧00 ஸ்திரீ தொண்டர்களையும் ௧00 ஆண் தொண்டர்களையும் கொண்டதாகிய பஞ்சாப் யுத்தசபைக் கூட்டம் ஜூன் உ௬-தேதி கூடிற்று அதில் பஞ்சாபில் தற்பொழுது அமுலிலிருந்து வரும் சட்டத்தை எதிர்ப்பதென்றும் அதற்கான தொண்டர்களைச் சேகரித்துக் கொள்வதென்றும், மூன்று மாதங்கட்கு அன்னியநாட்டுத் துணிகளை விற்காமலிருக்கக் கடைக்காரர்களிடம் கேட்டுக்கொள்வதென்றும், வரி மறுப்பை எங்கும் பிரசாரம் செய்வதென்றும், கடைகளில் அவசியமானால் மறியல் வேலை செய்யத் தொடங்குவதென்றும் முடிவு செய்யப்பட்டது. அங்குள்ள கடைக்காரர்கள் அன்னியநாட்டு பொருள்களை விற்பதில்லையென்று வாக்குறுதி யளித்துள்ளார்கள்.

### சைமன் அறிக்கையை கழுதை சுமந்தது.

ஜூன் உ௭-ந்தேதி ஸிம்லாவில் நடந்த ஓர் ஊர்வலத்தில் ஜனங்கள் ஒரு கழுதையின் மீது சைமன் அறிக்கையை வைத்துக்கொண்டு போனார்கள். அக்கழுதைக்கு விதேசிய ஆடைஅணிவிக்கப்பட்டிருந்ததோடு தலையில் ஓர் ஆங்கிலேயர் தொப்பியும் வைக்கப் பெற்றிருந்தது. ஊர்வலம் முடிவுற்றதும் இந்துக்களும் முஸ்லிம்களுமாக பலர் அவ்வறிக்கையைக் கண்டித்துப் பேசினார்கள்.

# செய்தித்திரட்டு.

### ராஜவிசுவாசிகள் கூட்டம்.

ஜூன் உ௬-ந்தேதி திருச்சி ஜில்லாக் கலக்டர் தலைமையில் முசிரியில் ஓர் ராஜவிசுவாசிகள் கூட்டம் நடைபெற்றது. பல பார்ப்பன காங்கிரசையும் சாரதாச் சட்டத்தையும் கண்டித்து பிரசங்கம் நிகழ்த்தினர்.

### காஷ்மீரஅரசரின் உத்தரவு.

காஷ்மீரத்திலும் ஜம்மு சமஸ்தானத்திலும் எவ்வித அரசியல் கூட்டங்களும் கூட்டலாகாதென்றும், ஊர்வலங்களும், மறியல்களும், தேசியக்கொடி பறக்கவிடுவதும் செய்யலாகாதென்றும் மீறிச் செய்தால் கடுந்தண்டனைக்களாக வேண்டுமென்றும் அரசர் உத்தரவிட்டிருக்கிறார்.

### தபால் தந்தி கட்டணங்கள் உயர்த்த யோசனை.

தந்தி தபால் இலாகாக்களில் வருமானத்தைவிட செலவு இப்பொழுது 48-லட்சம் ரூபாய் அதிகமாக இருக்கிறது. இதனை முன்னிட்டு, சமீபத்தில் கூடிய இந்திய சட்டசபையின் கணக்குக் கமிட்டியினுடைய முதல் கூட்டத்தில் தந்தி யிலாகாத் தலைவர் மிஸ்டர் ஸாம்ஸ் பத்திரிகைகட்கு வாங்கும் தபால் கட்டணத்தையும் தந்திக் கட்டணத்தையும் உயர்த்திவிடின் மேற்சொன்னபடி ௫௮ லட்சத்தில் ஒரு நல்ல பாகம் வசூலாகிவிடுமென்று சொன்னார். அதற்குக் கமிட்டிக் கட்டுப்பட்டு விடாது. அப்பிரேரேபணையை ஒத்திப் போட்டிருக்கின்றது.

### காந்திக் குல்லாத் தடை.

காந்திக் குல்லாத் தரிக்கக்கூடாதென்று குண்டூர் ஜில்லா மாஜிஸ்திரேட் ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். அதனை மீறியதற்காக ௪ தொண்டர்கள் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

### ஐக்கியமாகாணத்தில் ௭௫0 பேர் சிறைவாசம்.

ஐக்கிய மாகாணக் காங்கிரஸ்கமிட்டி விடுத்துள்ள ஓர் அறிக்கையின்படி இதுவரையிலும் அங்கு உப்புச் சத்தியாக்கிரகத்தை முன்னிட்டு ௭௫0 பேர் சிறை சென்றிருக்கின்றார்களென்றும், மற்ற மாகாணங்களைவிட ௧௮0 பேர்கள் கூடுதலென்றும் தெரிகிறது.

### அச்சுச்சட்ட அமுல்.

'சக்தி' பத்திரிகையின் சட்ட மறுப்பு.

அவசர அச்சுச்சட்டப்படி 'நவஜீவன்' பத்திரிகை, 'யௌவன இந்தியா' ப்பத்திரிகை நவஜீவன் அச்சுக்கூடம் இவற்றிற்காக தலா ௧000 ரூபாய் ஜாமீன் கொடுக்க வேண்டுமென்று கோரும் நோட்டீஸ் சிறையிலிருக்கும் ஸ்ரீமான் மோகன்லால்பட்டிற்குச் சாதா செய்யப்பட்டிருக்கிறது.

### மகாத்மாவைக் காண நேருவின் வேண்டுகோள்.

பண்டித மோதிலால் நேரு சிறையில் மகாத்மாவைக் காணவேண்டுமென்று செய்துகொண்ட வேண்டுகோள் உள்நாட்டு இலாகாதாரால் அனுமதிக்கக் கூடாதென்ற பலமான சிபார்சுகளுடன் லண்டனுக்கு அனுப்பப்பட்டிருக்கின்றது.

---

## நோட்டீஸ்.

### தேவகோட்டை டி.மு. கோர்ட்டு

O P. No. 7 of 1930.

க. புதுவயல் பெரி. அரு.பள. வ. வள்ளியப்ப செட்டியார் } மனுதார்.

நேமத்தாம்பட்டி வெ.ப.சு. ருமசாமி செட்டியார் } எதிர் மனுதார்

மனுதாரின் மகள் இறந்து போன உமையாளாச்சிக்கு வரவேண்டிய கடன் தொகையை வசூலிக்க தனக்கு வார்சு சர்டிபிகேட்டு கொடுக்க வேண்டுமென்று கோறி ஷை கோர்ட்டில் மனுதார் மனுச் செய்து கொண்டு, அதற்கு 1930-ஞு ஜூலை-மீ" 17-உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அது விஷயத்தில் ஆக்ஷேபனையுள்ளவர்கள் ஷை தேதி காலை 11 மணிக்கு ஷை கோர்ட்டு முன்பாக ஆஜராகி ஆக்ஷேபணையை தெரியப்படுத்திக் கொள்ளலாம்.

தேவகோட்டை 26—6—1930 } R. Satyamurthi Iyer
Vakil for Petitioner.

சைமன் அறிக்கை இரண்டாம் பாகம் இப்பொழுது வெளிவந்திருக்கிறது; அதில் சைமன் கமிஷன் சிபார்சுகள் அடங்கியிருக்கின்றன. இந்த இரண்டாம் பாகம் ௯௧௧ பக்கங்கள் கொண்டது. அதில் கமிஷனர்கள் கூறியிருப்பதாவது:—“இந்த ரிப்போர்ட்டில் இந்தியாவில் சென்ற சில மாதங்களாக நடைபெற்ற சம்பவங்களை நாங்கள் குறிப்பிடவே இல்லை. வாஸ்தவத்தில் இந்த சம்பவங்கள் நிகழும் முன்னமேயே எங்கள் சிபார்சுகளில் பெரும்பாலன ஏகமனதாக முடிவு செய்யப்பட்டு விட்டன. ஆகவே இந்தியாவில் சமீபத்தில் நிகழ்ந்த சம்பவங்களை எண்ணி எங்கள் அறிக்கையில் ஒரு வரியையாவது நாங்கள் குறைக்கவில்லை. எனென்றால் சில குறிப்பிட்ட சம்பவங்களை கவனியாமல் விசால நோக்குடன் விஷயங்களைப் பரிசீலனை செய்யவேண்டியது அவசியமாயிருக்கிறது.”

அறிக்கையில் மே ௨௭-ந் தேதி கமிஷனர்கள் கையெழுத்து செய்தார்கள். சில இடங்களில் சில மெம்பர்கள் அபிப்பிராய வித்தியாசம் காட்டியிருந்தாலும் மொத்தத்தில் அறிக்கை ஏகமனதாகவே வெளியிடப்பட்டிருக்கிறது. கமிஷனர்கள் கூறுவதாவது:—நாங்கள் வகுக்கும் அரசியல் அமைப்பு மாற்றங்கள் அனைத்தையும் பூரணமாய் பார்த்த பிறகே தீர்மானம் செய்ய வேண்டும். அறிக்கையில் ஒரு பகுதிக்கும் இதர பகுதிகளுக்குமுள்ள சம்பந்தத்தை கவனியாமல் நாங்கள் சிபார்சு செய்வோமென்று ஒருவரும் எதிர்பார்க்கக் கூடாது.

### அறிக்கைபாகுபாடு.

அறிக்கை ௧௨ பகுதி கொண்டது. முதற் பகுதி கமிஷன் சிபார்சுகளுக்கு ஆதாரமான பொதுக் கொள்கைகளை விளக்குகின்றது. சுயேச்சை யடைந்த மாகாணங்களடங்கிய ஒரு அகில இந்திய ஐக்கிய ஆட்சி முறை ஸ்தாபிப்பதே கமிஷனர்களின் முக்கிய கருத்தாக இருக்கிறது. அந்த ஐக்கிய அரசாட்சியில் வைஸ்ராயே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதியாக இருப்பார். இராணுவம் சுதேச சமஸ்தானங்கள் மேற்பார்வை சமூக விஷயங்கள் முதலியனவெல்லாம வைஸ்ராய் அதிகாரத்திலே இருக்கும். மாகாணங்களில் சட்டசபைக்கு ஜவாப்தாரியான ஆட்சி முறை ஸ்தாபிக்கப்படும். எல்லா இலாக்காக்களும் மந்திரிகளுக்கு விட்டுக் கொடுக்கப்படும். மந்திரிகளைத் தேர்ந்தெடுக்கவும் நியமனம் செய்யவும் கவர்னருக்கு விசேஷ அதிகாரம் வழங்கப்படும். சிறுபான்மைக் கட்சிகளின் பாதுகாப்புக்காகவும் சாதக பாதகமான சட்டங்கள் ஏற்படுத்தப்படாமல் தடுக்கவும் சட்டத்தையும் சாமாதானத்தையும் பரிபாலிக்கவும் கவர்னருக்கு இத்தகைய விசேஷ அதிகாரம் வழங்கப்படும்.

### இரண்டாவது பகுதி.

இரண்டாவது பகுதியில் கவர்னர்களுக் கடங்கிய மாகாணங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. தற்போது அமுலிலிருக்கும் தனித்தொகுதிகளை ஆதாரமாகக் கொண்டு மகாணச் சட்டசபைகளை விருத்திசெய்ய சிபார்சு செய்யப்பட்டிருக்கின்றது. வேறு விதமான ஒப்பந்தங்கள் ஒப்புக்கொள்ளப் படவில்லையானால் லட்சுமணபுரி ஒப்பந்தம் ஆதாரமாக ஒப்புக்கொள்ளப்படும. வாக்காளர் தொகை மும்மடங்கு விருத்தி செய்யப்படும். அதற்காக ஒரு வாக்காளர் நிர்ணயக்கமிட்டி நியமிக்கப்படும். மாகாண எல்லைகளைப் பரிசீலனைசெய்து நிர்ணயம் செய்ய மாகாண எல்லை நிர்ணயக் கமிஷன் நியமிக்கப்படும். மாகாணங்களுக்கு அபிவிர்த்தியடையத்தக்க ஒரு அரசியல் திட்டம் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

### மூன்றும் பகுதி.

மூன்றுவது பகுதியில் வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களையும் மற்றும் பிரத்தியேகப் பிரதேசங்களையும் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் ஒரு சட்டசபை ஸ்தாபிக்கப்படும். சட்டமியற்றவும் வரி நிர்ணயம் செய்யவும் அச்சட்ட சபைக்கு அதிகாரம் வழங்கப்படும். அம்மாகாணத்தில் அரசியல் நிருவாகப்பொறுப்பு சீப் கமிஷனரிடம் அடங்கியிருக்கும். அரசியல் முன்னேற்றமடையாத பிரதேசங்கள் மத்திய சர்க்காருக்கு விட்டுக்கொடுக்கப்படும்.

# சைமன் கமிஷன் சிபார்சுகள்.

## கவர்னர் சர்வாதிகாரியானர்.

### ஆதித்திராவிடருக்கு நீதி யெங்கே?

### நான்காம் பகுதி.

நான்காவது பகுதியில் மத்திய சர்க்காரைப்பற்றி விவரிக்கப்பட்டிருக்கின்றது. மத்தியசர்க்காரர் ஒரு ஐக்கிய சட்டசபை அதிகாரத்துக்கு உட்பட்டிருக்கும். ஐக்கிய சட்டசபையில் மாகாணங்களால் விதாசாரப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட ௨௫௦ மெம்பர்கள் இருப்பார்கள். மத்திய சட்டசபைக்கும் ராஜாங்கச் சபைக்கும் முன்ன அதிகாரங்கள் இப்பொழுதைப் பாலவே இருக்கும். ராஜாங்க சபைக்கு மாகாணச் சட்டசபைகளே மெம்பர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டும். மத்திய சர்க்காரில் உத்தியோகஸ்த மெம்பர்கள் தொகை மட்டும் குறைக்கப்படும். மற்ற அம்சங்களில் மத்திய சர்க்காருக்கும் மத்திய ஐக்கிய சட்டசபைக்கும் உள்ள சம்பந்தம இப்பொழுது இருப்பதுபோலவே இருக்கும். மத்திய சர்க்கார் நிர்வாக உத்தியோகஸ்தர்களை சக்ரவர்த்தி நியமனம் செய்ய மாட்டார்; மத்திய சட்டசபை மெம்பர்களில் ஒருவரோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவரோ மத்திய சர்க்கார் நிருவாக மெம்பர்களாக நியமனம் செய்யப்படலாம். மகாணங்களில் சுய ஆட்சி பரீட்சார்த்தமாக நடைபெறுகையில் மத்திய சர்க்கார் வலுவுடையதா யிருக்கவேண்டுமென்பதே கமிஷனர்களின் நோக்கம்.

### ஐந்தாம் பகுதி.

ஐந்தாவது பகுதியில் இராணுவ சம்பந்தமான இந்தியப் பாதுகாப்பு விஷயமாக இந்தியாவும் பிரிட்டனும் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும், இந்தியப் பாதுகாப்புக்காகவும் உள் நாட்டு பந்தோபஸ்திக்காகவும் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் இராணுவத்தை வைஸ்ராய் அதிகாரத்தில் வைக்க வேண்டுமென்றும், அந்த இராணுவத்தின் செலவுக்காக ஒரு குறிப்பிட்ட தொகையை இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு வழங்க வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகவே, பிரதம சேனாபதி இனிமேல் இந்திய சர்க்காருக்கு அடங்கிய ஒரு உத்தியோகஸ்தராயிருக்க மாட்டார், வைஸ்ராய் அதிகாரத்துக்கு அவர் அடங்கியிருப்பார்.

### ஆறும் பகுதி.

ஆறுவது பகுதியில் பர்மாவை இந்தியாவிலிருந்து பிரித்து விடவேண்டுமென்று சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. இந்தியாவில் இருப்பது போலவே வடமேற்கு எல்லைப்புறத்திலிருக்கும் படை ஏகாதிபத்தியத்துக்கு உட்பட்ட படையாகவே இருக்கும்.

### ஏழாம் பகுதி.

ஏழாவது பகுதியில் இந்தியாவுக்கும் சுதேச சமஸ்தானங்களுக்கும் எதிர்காலத்தில் இருக்கவேண்டிய சம்பந்தத்தை விளக்கிக்காட்டப்பட்டிருக்கிறது. இந்தியாவுக்கும் சமஸ்தானத்துக்கும் பொதுவான விஷயங்களைப்பற்றித் தீர்மானம் செய்ய மத்திய இந்திய ஆசாங்கத்தில் ஒரு கௌன்சில் ஏற்படுத்த வேண்டுமென்று குறிப்பிடப் பட்டிருக்கிறது.

### எட்டாம் பகுதி.

எட்டாவது பகுதியில் இந்திய பொக்கிஷத்தைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. அதில் திரு. லேய்ட்டன் திட்டம் விளக்கப்பட்டிருக்கிறது. ஐக்கிய சட்டசபை மாகாணங்களின் உபயோகத்துக்காக ஒரு பொதுநிதி சேர்ப்பதே அந்த திட்டத்தின் ஒரு விசேஷ அமிசம். இந்தியா முழுதுக்கும் பொதுவாக பாதிக்கக் கூடிய வரிகளிலிருந்து அந்த நிதிக்கு பணம் சேர்க்கப்படும். அந்த நிதியை மாகாண ஜனத்தொகைக்குப் பொருத்தமாக மத்திய ஐக்கிய சட்டசபையார் மாகாணங்களுக்கு வழங்குவார்கள்.

### ஒன்பதாம் பகுதி.

ஒன்பதாவது பகுதியில் சிவில் சர்வீஸ் உத்தியோகஸ்தர்கள் விஷயமாக லீ கமிஷன் அபிப்பிராயப்படி சிபாரசுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பாதுகாப்புக்காக ஐ.பி. எஸ். உத்தியோகஸ்தர்களையும் வைத்துக் கொள்ள யோசனை கூறப்பட்டிருக்கிறது.

### பத்தாம் பகுதி.

பத்தாவது பகுதியில் ஹைகோர்ட்டுகள் மீதுள்ள அதிகாரத்தை மத்திய சர்க்கார் கீழ் கொண்டுவருதற்குள்ள யோசனைகள் கூறப்பட்டிருக்கின்றன.

### பதினொன்றும் பகுதி.

பதினொன்றாவது பகுதியில் இந்திய சர்க்காருக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் இருக்க வேண்டிய சம்பந்தத்தைப்பற்றி கூறப்பட்டிருக்கிறது. இந்தியா கௌன்சில் அமைப்பைத் திருத்துவதற்குள்ள யோசனைகளும் அதில் கூறப்பட்டிருக்கின்றன.

### பன்னிரண்டாம் பகுதி.

பன்னிரண்டாவது பகுதியில் ஒருபொது விமரிசனமும் முடிவுகளும் அடங்கியிருக்கின்றன.

மாகாணங்களில் சுய ஆட்சிப் பரீட்சை நடைபெறுகையில், இந்திய சட்ட சபைக்குத் தகவல் இல்லாமலே மத்திய சர்க்காரில் தற்காலிக ஏற்பாடுகள் செய்து அரசியல் அமைப்புக்கு பழுதேற்படாமல் பாதுகாத்து கடைசியில் ஒரு ஐக்கிய அரசியல் முறை அமைப்பதே சைமன் திட்டத்தின் நோக்கமாக இருக்கிறது.

### கமிஷனரின் நோக்கம்.

அரசியல் அமைப்பைப்பற்றி முதலாவதாக அவர்கள் கூறுவதாவது:—புதிய அரசியல் அமைப்பில் அது சுயமாக விருத்தியடைவதற்கு விதிகள் இருக்க வேண்டுமென்பதே எங்கள் முக்கிய நோக்கம்.

௧௯௧௯-வது வருஷத்திய சீர்திருத்தத்தினால் விரும்பிய பலன் ஏற்படவில்லையென்பதே எங்கள் அபிப்பிராயம். எனவே, குறிப்பிட்ட காலங்களில் சீர்திருத்தத் தேவையில்லாத ஒரு அரசியல் திட்டம் வகுப்பதே எங்கள் முழு நோக்கமாக இருந்திருக்கிறது. சுயமாகவே விருத்தியடைவதற்குள்ள மார்க்கங்கள் இந்த சீர்திருத்தத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன. மாகாணங்களை வரிசைப்படுத்தி ஒவ்வொரு மாகாணத்துக்கு ஒவ்வொரு மாதிரியான அரசியல் முறையை வழங்குவது விரும்பத்தக்கதல்ல; ஒவ்வொரு மாகாணங்களின் அவ்வக்கால நிலைமைக்கேற்றபடி முன்னேற்றமடைய சாதகமான ஒரு அரசியல் அமைப்பு ஏற்படுத்துவதே தற்காலத்துக்குத் தேவையானதென்று நாங்கள் நம்புகிறோம். மத்திய சர்க்காரை எவ்வாறு அமைப்பது என்பதுபற்றி கூறமுடியாது. அது எதிர்காலப் போக்கைப் பொறுத்திருக்கும் ஒரு பார்லிமெண்டுச்சட்டத்தினால் இந்திய சர்க்காரின் கடைசி அமைப்பை உண்டு பண்ண முடியாதென்றும் கமிஷனர்கள் கருதுகிறார்கள். அப்பால், ௧௯௧௭ ஆகஸ்டு ௨௦-ந் தேதி அறிக்கையில் இந்தியாவின் லக்ஷியத்தைப்பற்றி பிரிட்டிஷ் சர்க்கார் கூறியிருப்பதை கமிஷனர்கள் வற்புறுத்துகிறார்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குட்பட்ட நாடுகளோ பிரிட்டிஷ் இந்தியா மட்டுமன்றி சுதேசசமஸ்தானங்களும் சேர்ந்த பூரண இந்தியாவகிக்கவேண்டும் சம்பந்தத்தையும் மனதில் வைத்துக்கொண்டே தற்காலச் சீர்திருத்தம் வழங்கப்படுகிறது என்று அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. உலக அமைப்பிலுட்பட்ட தேசங்களில் இந்தியாவும் ஒன்றாக இருப்பது அவர்கள் அபிப்பிராயத்தை வலியுறுத்துகிறது.

### எதிர்கால அரசியல் அமைப்பு

எதிர்கால இந்திய அரசியல் அமைப்பில் இந்தியா முழுதும் அடங்கியிருக்கும் கால நிலையினும் இயற்கை அமைப்பினும் சமய சமூக வித்தியாசங்களிலும் ஒற்றுமையில்லாத பிரதேசங்களும் எதிர்கால இந்திய அமைப்பில் சேரவேண்டியவைகளே இத்தகைய வித்தியாசங்களை அடிப்படையாகக் கொண்டு பிரிட்டிஷ் இந்தியாவும் சுதேச சமஸ்தானங்களும் பிரிக்கப்படவுமில்லை. மொத்தமாகப் பார்த்தால் இந்தியாவிலே வேற்றுமைக்குள்ளே ஒற்றுமையும் காணப்படுகிறது. பிரிட்டிஷ் இந்திய க்ஷேமத்துக்கும் சுதேச சமஸ்தானங்களின் க்ஷேமத்துக்கும் முக்கியமாக தேவையாயிருப்பது ஐக்கிய உணர்ச்சியாகும். பூகோளச் சார்பான ஒற்றுமையோடும் சேர்ந்து அரசியல் ஒற்றுமையோடும் சேர்ந்து பொருளாதாரச் சார்பாகப் பார்த்தால் இந்தியாவும் சுதேச சமஸ்தானங்களும், ஒன்றுபட்டால் வாழ்வுண்டு; ஒற்றுமை ஒழிந்தால் இரு தேசங்களும் ஆழும். மத்திய சர்க்கார் ஜனநாயக ஆட்சிக்கு உட்பட்டால் இந்தியக் குடிகளில் ஐந்திலொரு பங்கியார் பொருளாதார விஷயத்தில், பாக்கி நான்கிலொரு பகுதியாருக்கு அடிமைப்பட வேண்டியதாக ஏற்படும். எல்லா கட்சியாரையும் சமரசப்படுத்தத்தக்க ஏற்பாடுகள் செய்யப்படாவிட்டால் பொருளாதார பாதுகாப்புத் தேவையான பிரதேசங்களில் பலதிறப்பட்ட காப்பு வரிகள் ஏற்படுத்தப்படலாம். பாதுகாப்பு சஞ்சார சௌகரியங்கள் சமூக விஷயங்கள் எல்லாம் இந்திய பொது க்ஷேமத்துக்கு அடுத்தனவாகும். இந்த விஷயங்களில் சில ராஜி பேசிமுடிவுசெய்யக்கூடியனவாயிருக்கலாம். இவ்விஷயங்களில் கடைசியாக ஒரு முடிவு செய்ய ஏதாவது ஒரு ஸ்தாபனம் இருக்கவேண்டியதுதான். பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரத்தினால் இந்தியாவில் நிலைபெற்றிருக்கும் ஒற்றுமையினால் இந்தியாவில் தேசிய உணர்ச்சி நாளுக்குநாள் வலுப்பெற்று வருகிறது. ஆனால் தேசியத்துக்கு நன்மையும் தின்மையும் விளைவிக்கமுடியும். இந்தத்தேசியசக்தியை ஆக்கவழியில் திருப்புவதே எதிர்கால சர்க்காரின் நோக்கமாயிருக்க வேண்டும். இந்திய தேசிய உணர்ச்சியை பிரிட்டிஷ் இந்திய நிர்வாகிகளோ சுதேச சமஸ்தான மன்னர்களோ அலக்ஷியம் செய்ய முடியாது. ஒரு ஐக்கிய அரசியல் அமைப்பு மூலமே தற்கால தேசிய உணர்ச்சி விருத்தியடைய முடியும். இந்தியாவின் இறுதியான அரசியல் அமைப்பு அகில இந்தியாவுக்கும் பொருத்தமானதாகவே இருக்கவேண்டும். பிரிட்டிஷ் இந்தியாவோடு நெருங்கிய சம்பந்தம் பெற சுதேச மன்னர்களைக் கட்டாயப்படுத்த முடியாது. சுதேச மன்னர்கள் பிரிட்டிஷ் இந்தியாவோடு ஐக்கியப்பட விரும்பினால் அவர்களும் தாராளமாக வந்து சம்பாஷனை

(௧௧-ம் பக்கம் பார்க்க.)





# கோயில் கட்டுதலும் கும்பாபிஷேகமும்.

மகிபாலன்பட்டி திரு. மு. சின்னையா செட்டியார் எழுதுவது.—

துரதிர்ஷ்டவசமாக நம்மவரைப் பிடித்திருக்கும் பைத்தியங்களில் இதுவும் ஒன்று. கோயிலானாலும் கும்பாபிஷேகமானாலும் அதற்கு ஒரு அளவுண்டு. அளவில்லாமற் செய்யப்படுகிற காரியம் எதுவாயினும் அது பைத்தியம பிடித்த செய்கையேயாகும்.

ஒரு ஊரின் அளவுக்கும் அந்த ஊரில் வசிக்கும் ஜனத்தொகையின் அளவுக்கும் தக்கபடி கோயிலிருப்பதுதான் பொருத்தமேயன்றி ஆயிரம் ஜனங்கள் வசிக்கும் ஊரில் ஐந்து லட்சம் செலவிட்டுக் கோயிற் கட்டிவைப்பது பொருத்தமா? ஐயாயிரம பத்தாயிரம் செலவிட்டு கட்டினாற் போதாதா? அந்தக்கோயிலில் ஈஸ்வரன் குடிகொள்ளமாட்டாரா? ஜனங்கள் கூடித் துதிப்பதற்கே ஆலயமன்றி எங்குமுள்ள ஈசனுக்கல்லவென்பதை அறிவுடையோர் ஒப்புக்கொள்ளுவர். ஆலயங்கட்டுமுன் அவசியத்தின் அளவைத் தெரிந்துகொண்டு ஆரம்பிக்கவேண்டும். முன் பின் யோசிக்காமல் கண்களை மூடிக்கொண்டு ஆரம்பித்துவிட்டு, குறைகுறையாக வைத்துவிட்டு ஆரம்பித்தவர் போய்விட, அவர்மகனும் மகனுக்குப் பிறகு பேரனும் ஒரு சமயம் பேரனுக்கு மகன் காலத்திற்கூட கட்டி முடியாமற் கஷ்டப்படுகிறது. ஆரம்பித்தவர் அந்தசமயம் அவருக்குள்ள மனவலுவாலோ பணவலுவாலோ ஆரம்பித்துவிடுகிறார். பிறகு, தாத்தா எடுத்த காரியத்தை தம்பி முடிப்பதற்கு யாசகம் வாங்கவேண்டியதாகி விடுவதுமுண்டு. இவ்வளவு சங்கடமான காரியம் தேவைக்கு அதிகமாகக் காண்பதால் உபயோகமாகவில்லை என்பதுதான் வருத்தத்துக்குரியது. கோயிலில்லாத இடங்களில் குடி ஜனங்களின் அளவுக்குத் தக்கபடியாகவும் சீக்கிரம் முடியத்தக்கதாகவும் கட்டிவைத்தால் அது கொண்டாடற் பாலதாகும். அப்படியொரு ஆழ்ந்த யோசனையோடும் மதாபிமானத்தோடும் நம்மவர் ஆலயங்கட்டும் வேலையிற் பிரவேசிக்கிறார்களென்று உபசாரமாகக் கூறலாமேயன்றி உண்மையாகக் கூறமுடியாது. தென்னாட்டிற் கோயிற்கட்டும் பெருமை நமது சமூகத்துக்கு ஒருபுறமிருந்தாலும் கோயிற்கட்டி நம்மவரின் செல்வநிலையையும் காணயங்களையும் குட்டிச்சுவராக்கி ஐப்பீ கொடுக்கும் பெருமையும் ஒருபுறம் சற்றுப்பெரிதாக வளருகிறது.

கோயில்தான் தாத்தா ஆரம்பித்துவிட்டார். எடுத்த காரியத்தை முடிக்க வேண்டியதாயிற்று. கும்பாபிஷேகத்தை அடக்கமாகச் செய்தாலென்ன? போட்டி போட்டு ஒருவருக்கொருவர் அதிகப்படியாகச் செய்துகொண்டே போனால் அதன் முடிவுதான் என்ன? ஆயிர ரூபாயிற் செய்யத்தக்க காரியத்தை ஐம்பதாயிரம் நூறாயிரம் செலவிட்டுச் செய்தால் அது விவேகமா அல்லது பைத்தியமா? அப்படித்தான் லட்சியமில்லாமற் செய்துவிட நமது சமூகம் என்ன தாங்க முடியாத செல்வப் பெருக்கை யடைந்திருக்கிறது? விளக்கு வைத்துக்கணக்குப்பார்த்தால் கடன் ஏடுகள்தான் அதிகமாக இருக்கும். இந்தக் குருட்டு வேலைகளைப் பெருமைக்குச் செய்கிறவர்களின் கடைசன் வருஷம் ஒன்றுக்கு பத்து எட்டு சாய்ந்த எண்ணமாகவே இருக்கின்றன. அதையொட்டிப் பலருக்கும் கஷ்டமுண்டாகிறது. இந்தப் பெருமைதான் இப்போது நமக்குக் கிடைக்கும் பெருமையாக இருக்கிறது.

கும்பாபிஷேகமும் ஒருடம்பமே. சாந்திக் கல்யாணம் முதலிய டம்பங்களைப் போல இதுவும் ஒன்றேயன்றி வேறல்ல. நல்ல சித்தவிர்த்தியுள்ளவர்கட்கு இந்த டம்பத்தில் விருப்பமிருக்க மார்க்கமில்லை. மோட்டார் வசதியுள்ள இந்த நாளில் நகரவிருந்து நம் நாட்டில் அவசியமில்லை, ஒருவாறு வேண்டுமென்றாலும் அடக்கமாகச் செய்துவிடலாம். பத்தாயிரம் பேருக்கு சாமான் சேகரித்து ஐயாயிரம் பேருக்கு சமையல் செய்து ஆயிரம் இரண்டாயிரம் பேர் புளியேப்பத்தோடு சாப்பிட்டு மிச்சமிருப்பது அழுகிக் கெட்டு எடுத்தெறிவது என்ன வேலை? இதோடு பெண்கள் விருந்து, நாட்டார் விருந்து, பிராம்மணர் விருந்துகள், உத்தியோகஸ்தர் விருந்து, மடத்தார்கட்கு விருந்துகள், அதற்கு வெவ்வேறு இடவசதி, தண்ணீர்வசதி, படுக்கைவசதி, காற்றுவசதி. இத்தனை யேற்பாடுகளும் ஒரு சிறிதும் குறைவின்றி நடைபெற்று நல்ல பேர் வரவேண்டும. இதற்குட் கலகங்கள் அடிதடிகள். விபூதிச்சண்டை பட்டுச் சாத்துச் சண்டை முதலிய பைத்தியகாரச் சண்டைகள் வந்து பேரைக் கெடுத்துவிடாமலிருக்க வேண்டும் மழை பெய்யாமலிருக்க வேண்டும். களவு திருட்டு நடவாமலிருக்க வேண்டும். கும்பாபிஷேகஞ் செய்து தப்பித்துக் கொள்ளுவதற்கு ரெசர்ப்போலீஸ் பந்தோபஸ்து வேறு வேண்டும். என்ன அழகு! என்ன பெருமை! இதை ஆத்மார்த்தமான செயலென்று யாராவது சொல்ல முடியுமா? வகை தெரியாமற் செய்யப்படும் டம்பச் செயலென்று சொல்வதிற் குற்றமென்ன?

போனது போகட்டும்; இனியாவது நமது சமூகம் இந்தக் காரியத்தில் மனம் போனபடி டம்பத்தையே பிரதானமாகக் கருதிப்பணத்தைப் பாழாக்காமல் ஜாக்கிரதையாக அளவறிந்து தேவையறிந்து பயன்படு முறையிற் செய்தல் வேண்டும். இந்த கும்பாபிஷேகங்களால் ஜனங்கள் படுங்கஷ்டங்களைப்பின்னுமொரு முறை வர்ணிப்போம்.

# லாலுகுடித்தாலூகா மகாநாடு.

குறிப்பிட்டபடி ௨௯—௬—௩௰ தேதியன்று லாலுகுடிக்கு அடுத்த “நகர்” கிராமத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. லாலுகுடி ரோட்டில் வராளமான அன்பர்கள் காலை ௯ மணிக்குத் தலைவர்களை வரவேற்று மகாநாட்டுப் பந்தருக்கு அழைத்துச் சென்றனர். நகர் முழுதும் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. ‘ஜே’ ஒலி கோஷித்தன. மகாநாட்டுப் பந்தர் வந்துசேர்ந்ததும் திருமாணிக்கர் சுயமரியாதைப் பாட்டுகள் பாடினர். இரண்டு சிறுமிகள் சுயமரியாதை இயக்கத்தைப்பற்றி சம்பாஷணைசெய்தனர். பின்னர் தலைவர்கட்கும் ஈ. வெ. ரா. அவர்கட்கும் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப் பெற்றது திரு. என். எஸ். எம் செல்வக்கணபதி அவர்கள் மகாநாட்டுத் திறப்புவிழா வாற்றும்படி கேட்டுக் கொண்டார்கள். திரு. ஈ. வெ. ரா. அவர்கள் சிறிது நேரம் சொற்பொழிவு செய்து திறந்து வைத்தார்கள். பின்னர் வரவேற்புக் கழகத்தலைவர் திரு இ. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தமது சொற்பொழிவைச் செய்தார்கள். திரு. என். எம். எஸ். செல்வக்கணபதி அவர்கள் தலைவர் தேர்தல் பிரேரபணை செய்ததும் திருவாளர்களான வக்கீல் டி. வி. சோமசுந்திரம் பி. ஏ. பி.எல்., ஈ. வெ. ரா. அம்பில்செல்லப்ப முதலியார், டாக்டர் டி. சி. சிங்காரம், கே. எம் பாலசுப்பிரமணியம் பி ஏ பி எல், ஜே எஸ் ராமானுஜம் பி ஏ பி எல் ஆகியவர்களால் ஆமோதிக்கப்பட திருவாளர் சொ. முருகப்பா அவர்கள்தலைமை தாங்கினர்கள், தலைவரவர்கள் சொற்பொழிவுமுடிந்ததும் ௧௨ மணிக்கு பகற்போஜனம நடைபெற்றது

திருவாளர்களான டி வி சோமசுந்திரம் பி ஏ பி எல், ஜே எஸ் ராமானுஜம் பி ஏ பி எல், கோவிந்தராஜலு பி ஏ பி எல், டி என் வீராசாமி பிள்ளை பி ஏ பி எல், வேதாசலம் பி ஏ பி எல், என் ஆதிமூல வாண்டையார், டி எஸ் தங்கவேலு, மணவை திருமலைசாமி, ச ம சிவராமசிவம், சி கலியபெருமாள், டி எம் சதாநந்தம், ஆர் பெருமாள், செவந்திலிங்கஞ் செட்டியார், டி வி சுந்திரராஜலு நாயுடு, டி சி சிங்காரம் பூவாளூர் செல்வக்கணபதி, பூவாளூர் அ பொன்னம்பலம், அம்பில் செல்லய்யா முதலியார், அல்லித்துறைசாமிநாத வாத்தியார் நொச்சியம் நாராயணசாமி முதலியோர் மகாநாட்டிற்கு விஜயம் செய்திருந்தனர். பிற்பகல் ௩.௩௰-க்கு மகாநாடு மீண்டும் கூடியது. பல தீர்மானங்கள் பிரேரேபிக்கப்பட்டு ஆமோதித்து நிறைவேறியது. பெண் கல்வி வேண்டுமென்னும் தீர்மானத்தைப் பிரேரித்து ஸ்ரீமதி மரகதவல்லி அவர்கள் ௧௦ நிமிஷம் பேசினார்கள். திரு. முருகப்பா அவர்கள் தலைவர் முடிவுரையாக சுமார் ஒரு மணி நேரம் இயக்கத்தைப்பற்றிப் பேசினர்கள் திரு ஈ வெ ரா அவர்களும் நீண்டநேரம் சுயமரியாதை இயக்கத்தைப்பற்றி சொற்பொழிவாற்றினர்கள். திரு பொன்னம்பலனால் வந்தனம் கூறப்பட்டு மாலை ௬ மணிக்கு மகாநாடு இரவு ௭ மணிக்கு நிறைவேறியது.

# காரைக்குடி ரயில் பாதை.

௧—௭—௩௰ செவ்வாய்க்கிழமை முதல் காரைக்குடி லயனில் ரயில் ஓடிக்கொண்டிருக்கிறது. சென்னையிலிருந்து வரும் போட்மெயில் காலை ௭-௩௰ மணிக்கு திருச்சியிலிருந்து புறப்படுகிறது. சென்னையிலிருந்து புறப்படும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் ௪௦-௩௰க்கு திருச்சிக்கு வருகிறது. திருச்சியிலிருந்து ௧௧-மணிக்குப் புறப்படுகிறது. திருச்சியிலிருந்து புதுக்கோட்டை வரை ௫ வண்டிகள் விடப்படுகின்றன. அவற்றுள் மேலே குறிப்பிட்ட ௨ வண்டிகள் மட்டும் காரைக்குடிவரை வருகின்றன. மானாமதுரையிலிருந்து சிவகெங்கைவரை ௯ வண்டிகள் விடப்படுகின்றன. அவற்றுள் பகல் ௧௨-௰க்கு மானாமதுரையிலிருந்து புறப்படுகின்ற வண்டி மட்டும் ௩ மணிக்கு காரைக்குடி வந்து சேருகிறது. அதே வண்டி ௩-௪௰க்குக் காரைக்குடியிலிருந்து புறப்பட்டு ௫-௩௩க்கு மானாமதுரை போய்ச் சேருகிறது.

புதுக்கோட்டை வரை இதுவரையில் ஓடிக்கொண்டிருந்த எல்லா வண்டிகளும் எல்லா ஸ்டேஷன்களிலும் நிறுத்தப்பட்டன. ஜூலை முதல் தேதி ௭-௰-க்கு திருச்சியிலிருந்து புறப்பட்ட மெயில் வண்டி ௮-௪௰-க்கு கீரனூரிலும் ௯-௨௯-க்கு புதுக்கோட்டை ௩௦ க அக்குசெட்டிநாட்டிலும்நிறுத்தப்பட்டு ௩௦-௪௰-மணிக்குக் காரைக்குடி வந்துசேர்ந்தது. புதுக்கோட்டையிலிருந்து காரைக்குடி வரை இடையில் ரயிலை அடுத்துள்ள ஊர்களின் அருகிலும் ரயில்வே கேட்டுகளிலும் ஸ்டேஷன்களிலும் ஜனங்கள் கூடிநின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். செட்டிநாட்டு ஸ்டேஷனில் பெரும் கூட்டம் திரண்டு நின்றது. ஸ்டேஷனுக்குப் பல கார்கள் வந்திருந்தன. அங்கு வண்டி ௫-நிமிஷங்கள் நின்றது. கோட்டையூரிலும் ஜனங்கள் மிகுதியாக நின்றனர். அங்கு வண்டி நிற்கவில்லை. காரைக்குடி ஸ்டேஷனுக்கு வண்டி வரும்போது நீண்ட விசாலமான பிளாட்பாரம் நிறைய ஜனக்கூட்டம் நிறைந்திருந்தது. சுமார் ஆயிரத்திற்கு மேலிருக்கும். பெண்களே மிகுதி. ஸ்டேஷனுக்கு எதிரிலுள்ள விசாலமான இடம் நிறைய கார்களும் ஜட்காக்களும் மாட்டு வண்டிகளும் நிறைந்திருந்தன. ரயில் வண்டி வந்து நின்றதும் வேடிக்கைபார்க்க வந்திருந்தவர்களில் அனேகர் முதல்வகுப்பு இரண்டாவது வகுப்பு வண்டிகளில் ஏறி உட்கார்ந்து பார்த்தனர். ஸ்டேஷனுக்கு முன்னால் சிறுதாமான காப்பிக்கிளப் பொன்று வைக்கப் பட்டிருக்கின்றது. ஸ்டேஷன் புதிதாகையாலும் பொட்டலில் இருப்பதாலும் வெய்யில் மழைக்கு வசதியில்லை வெயிட்டிங் ரூமும் இல்லையாது. ரயில்வேக்காரருடைய காம்பவுண்டு வரை அருமையான ரோடு போடப்பட்டிருக்கிறது. அதிலிருந்து காரைக்குடி ஊர்வரை சுமார் இரண்டு மைலுக்கு மேலிருக்கலாம். அதுவரையும் ரோடுகிடையாது. காடு; படுகாடு, கற்றாழையும் வேலமரமும் நிறைந்திருக்கின்றன. கால்வாய்களும் அறுத்தோடிகளும் நிறைந்துள்ளன. மரங்களுக்கு இடையே பாதை வளைந்து வளைந்து செல்லுவதும் பள்ளம் மேடுகளில் கார்கள் விழுந்து விழுந்து எழுவதும் நடந்து செல்லும ஜனங்கள் அதைப்பார்த்துச் சிரிப்பதும் எல்லாரும் கூடி முனிசிபாலிட்டியையும் சேர்மனையும் வாயில்வந்தபடி பேசுவதும் வெகு தமாஷாயிருந்தன. ட்ரைவர்களின் சாமர்த்தியத்தைப் பார்க்க வேண்டுமானால் அடிக்கொரு வளைவுள்ள இப்பாதையில் ஓட்டச்சொல்லிப்பரீட்சை பார்க்கலாமென்றும், எந்தக் காரின் ஸ்பிரிங் எப்படியிருக்கிறதென்று பரீட்சிக்க வேண்டுமானால் அதற்கும் இந்தப்பாதைதான் சிறப்பானதென்றும் பலர் பேசிக்கொண்டது வேடிக்கையாக இருந்தது. இதில் ஆள் ஒன்றுக்கு மூன்று அணா சார்ஜ் வாங்கிக் கொண்டு பஸ்களும் செல்லுகின்றன. பெண்மக்கள் அனேகர் கால் நடையாக வந்து சூடு தாங்கமாட்டாமல் கஷ்டப்பட்டனர். கால் நிறைய கற்றாழை முள்ளும் வேலா முள்ளுங் கலந்து தைத்தபடியால் வேகமாகச் செல்ல முடியாமலும் தவித்தனர். முதல் முதல் செவ்வாய்க்கிழமை ரயில் விட்டிருப்பதைப் பற்றி நல்ல கிழமைகளில் இதைவிட்டிருக்கலாம் என்று சிலர் கூறினார்கள்.

தபால்கள் வழக்கம் போல் மோட்டாரிலேயே போய்வந்து கொண்டிருக்கின்றது.

# சர்தார்பட்டேல் விடுதலை.

## “அடுத்தவாரம் மீண்டுமிங்கு வருவேன்.”

ஜூன் ௨௬-ந் தேதி வெளிவரவேண்டிய சர்தார் பட்டேல் ௨௦ தேதி பகல் ௧௨ மணிக்கு விடுதலை பெற்றார்.

தன் சிறைக்கூடத்தை விட்டு வெளி வரும் போது சிறை காவலரை நோக்கி “இந்த சிறையை எனக் கெனவே, காலியாகவே வைத்திருங்கள். நான் அடுத்தவாரமே மீண்டும் இங்கு வருவேன்” என வேடிக்கையாக மொழிந்தார். தன்னைக் கொண்டு போய் சத்யாக்கிர ஆசிரமத்தில் விட்டுவிடும்படி சிறை அதிகாரிகளை அவர் வேண்டிக் கொண்டார். எனவே, சிறையதிகாரி (ஜெயிலர்) அவரை சத்தியாக்கிரக ஆசிரமத்திற்கு ஒரு மோட்டாரில் அழைத்தும் போய்விட்டுவந்தார்.

இவரைக்காண பல பிரமுகர்கள் வந்து போய்க் கொண்டிருக்கின்றனர். இவர் சிறிது பலவீனப்பட்டிருப்பதாகத் தோற்றுகிறார். அவருடைய உடல் நிலைபற்றியாரும் கேட்டால் சிரித்துக் கொண்டு “முன்னைவிடச் சுகமாகத் தானிருக்கிறேன். ஆனால். என் பளு ௧௦ பவுன் மட்டுந்தான் குறைந்திருக்கிறது” எனக் கூறுகிறார்.

அஸோஸியேடட் பிரதிநிதி அவரைக் கண்ட போது “முதன் முதலாக நான் தான் சிறை சென்றேன். நாட்டின் நிலைமை இன்னதென எனக்குத் தெரியாது” எனக்கூறினர். அப்பிரதிநிதி அவருக்குச் சிறையில் படிப்பதற்குப் பத்திரிகைகள் கொடுத்தார்களாவெனக் கேட்டதற்கு டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகை மாத்திரம் கொடுத்தார்களென்றும் அதுவுங்கூட சிறை சென்ற ஒரு மாதம் கழித்துத் தான் கொடுத்தார்களென்றும் கூறினர்.

### ஊர் வலம்.

அன்று மாலை டாக்டர் கனகாவிட்டிலிருந்து ஒரு ஊர்வலம்புறப்பட்டது. திரு. வல்லபாய் படேல் ௪ குதிரைகள் பூட்டிய வண்டியில் அமர்ந்திருந்தார். ஊர்வலம் ௩ மைல் தூரமிருந்தது தேசியக்கொடிகள் திகழ்ந்தன. தேசிய கீதங்கள் பாடப்பெற்றன. ஊர்வலம் பல தெருக்களூடே சென்று சபர்மதி ஆற்றங்கரையில் நின்றது. அங்கே ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது.

### சர்தார் பிரசங்கம்.

அப்போது சர்தார் வல்லபாய் படேல் பேசியதன் சுருக்கமாவது:—நான் முதன் முதல் சிறைபுகுந்தவனாதலால் நம் நாட்டின் நிலைமை இப்போதின்னதென்று எனக்குத்தெரியாது. எனவே, உங்களுக்கு எந்த யோசனையும் கூறத்தக்க நிலைமையில் நான் இல்லை.

தலைவர்களனைவரும் சிறைப்பட்டிருந்தும் உங்கள் பெரும் ஊக்கத்தைக் காணும் போது என் மனம் அடையும் மகிழ்ச்சி சொல்லத்தரமல்ல, குஜராத்தியரின் அஹிம்சையும், தைரியத்தையும், தந்திரத்தையும், தியாகத்தையும் நான் பெரிதும் பாராட்டுகின்றேன். குஜராத்தின் நிலைமை இன்னதென நான் நன்கு தெரிந்து கொண்ட பிறகுதான் இன்னது செய்ய வேண்டுமென முடிவு செய்வேன்.

புதுக்கோட்டைக்கு இப்பாற்பட்ட தபால்கள் புதுக்கோட்டையி லிறக்கப்படுகிறது. காரைக்குடித் தபால், ரயிலில் வந்தால் ௧௦-௪௰க்கு வரக்கூடும். திரும்ப ௩-௪௰க்கு அனுப்பப்படும். இதற்கிடையில் சென்னைத் தபால்களைப் பார்த்து பதிலெழுத சாவகாசம் ஏற்படும். மோட்டாரில் தபால் வருவதால் இந்தவசதிகிடையாது. ரயிலில் வர இன்னும் சில தினங்களாகுமென்று தெரிகிறது.

நானென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோனென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
பிரமோதூத-ஹு ஆனி-மீ ௧௯-உ

## வீண் செலவு.

நமது தமிழக மக்களிற் பெரும்பாலார் ஏழை யென்று கூறப்படுவது சாதாரணமாக இருக்கின்றது. என்றாலும் பணக்காரரும் பலராவரென்பதை மறுக்க முடியாது. ஆனால் யாவரும் ஏழைகளின் கஷ்டத்தை அனுபவிப்பதையுங் காணலாம். தமிழ் நாட்டிற் பிறந்த யாவரும் ஒரளவு வாழுவகையில்லாமற் போய்விடவில்லை. ஏழை பணக்காரரென்ற இரண்டு கூட்டத்தினரும் வீண் செலவு செய்யக் கற்றுக் கொண்டு விட்டனர். வீண் செலவுக்கோர் எல்லையில்லை. வீண் செலவு செய்ய விருப்பமில்லாதவரும் செய்தே தீரவேண்டுமென்று சுற்றத்தாரால் வலியுறுத்தப்படுகிறது. வீண் செலவு செய்ய வேண்டுமென்று சமூக சமயச் சட்டம் விதிக்கிறது. அவைகளை மீறினால் மதிப்புக் குறைவுமென்று கருதப்படுகிறது. ஒருவன் அச்செலவைச் செய்ய மறுத்தால் பலருடைய பழிப்புக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. செலவும் கட்டுப்படுவதாக இல்லை. ஆகாயத்தில் பறக்கும் குதிரையின் மேல் ஏறிக்கொண்டபிறகு கடிவாளம் அறுந்துபோன கதையாக நமது ஜனங்களின் நிலையிருக்கிறது. சடங்குகளும் சாஸ்திரமும் கோயிலும் பரிகாரங்களும் மனிதனை அரித்து விழுங்குகின்றன. நாள்தோறும் அனுபவித்தே வருகின்றனர். செலவிடும்போது கண்ணீர் விடுவார் பலர். கொடுக்க வகையின்றிக் கடன் பெறுவோர் அநேகர். கடனும் அகப்படாமல் திண்டாடுவோரும் எண்ணற்றோர். என்ன கஷ்ட நிலைமை யேற்பட்டாலும் சடங்குகளும் விசேடங்களும் பிறவும் செய்துதான் ஆக வேண்டியிருக்கிறது.

பணக்காரருக்கு ௫0,000 செலவு. நடுத்தர யானவருக்கு ௫000-செலவு. மற்றவருக்கு ௫00-செலவு. குடிக்கக் கஞ்சிக்கு வகையற்ற ஏழைக்கு ௫0-கட்டாயம் வேண்டியிருக்கிறது. நமது தமிழ் மக்கள் கல்யாணத்தை ஒரே வேளையில் முடிப்பார்களானால்—கருமாதிக் காரியத்தை ஒரே வேளையில் முடிப்பார்களானால்—பரிகாரப் பித்தம் ஒழியுமானால்—பரலோகப் பித்தம் தெளியுமானால் ஒவ்வொரு குடும்பத்திலும் கண்ணீரைப் பார்க்க முடியாதென்று திட்டமாகக் கூறலாம். நமது மக்களுடைய பணம் முழுமையும், முயற்சி முழுமையும் சடங்குகளையும் பரலோகத்தையும் கோயிலையும் பற்றியழிவதால் மக்கள் வாழ்வுக்கு வேண்டிய நலன்களையும் கவனிக்கப்படாமல் அழிந்துபோய்விட்டன. மனிதர்கள் அறிவுபெற்று இன்ப வாழ்வு பெற்று வளர்ந்தோங்குதற்கு வேண்டிய சாதனங்கள் எதுவும் ஏற்பட வகையில்லை. ஒவ்வொருவரும் கட்டாயமாக வீண் செலவுசெய்தே ஆக வேண்டிய நிலை யேற்பட்டுவிட்டது. வீண் செலவுசெய்வதைக் காட்டிலும் பயனுடைய வழியில் செலவு செய்ய மனம் ஒருப்படவில்லை. இந்த நிலை ஜன சமூகத்துக்கு ஏற்பட்டால் அதன் பயன் அபிவிருத்தியாக இருக்க முடியுமோ? ஒவ்வொருவரும் தம் நிலைக்குத் தக்கப்படி வீண் செலவு செய்துவிட்டுத் தன் நிலைமையைச் சமாளிக்கவே பாடுபடவேண்டியவராகின்றனர். எந்த வியாபாரியும் எந்தத் தொழிலாளியும் எந்த அறிவாளியும் இந்த விலங்கத்தில் தான் அகப்பட்டிருக்கிறார். இப்படிக் கூறுவதைக் கண்டு சிலர் கோபமுறலாம். என்றாலும் நிலைமை இதுதான். கஷ்டம் கரைபுரண்ட வெள்ளமாகப் பெருகிவருகிறது. அதற்குத் தப்பிக் கரைசேர விரும்பவில்லை. விரும்புவோரும் துணிவாக வெளியேறவில்லை. தண்ணீரிலேயே மிதந்து மிதந்து சமாளிக்கத்தான் முயல்கின்றனர். நாளுக்குநாள் வீண் செலவுகள் வளர்ந்துகொண்டே செல்லுகின்றன. புதுப்புதுச் செலவு தோன்றிக்கொண்டே யிருக்கின்றது. கையை விட எவரும் அஞ்சுகின்றனர். நீண்ட நாளாகச் செய்து பழகிய வீண் செலவு மனிதர்களை ஆட்சிபுரிய ஆரம்பித்துவிட்டது. மனிதர்களின் கையில் அடங்கி நிற்க வேண்டிய செலவு இன்று அப்படியில்லை. செலவு போகிற போக்குக்கு மனிதன் செல்ல வேண்டிய நிலை யேற்பட்டுவிட்டது. எனவே திருத்தஞ் செய்வது லேசான காரியமல்ல. திருத்துவதைவிட ஒழிப்பதே மேலானதாகும். வீண் செலவை அடியோடு ஒழித்து விசேட நாள்களை நாழிகைக் கணக்கில் விடை கொடுத்தனுப்பவேண்டும். இன்றேல் விசேட நாட்களையும் சாதாரண நாட்களாகச் செய்தல் வேண்டும். இல்லாவிட்டால் என்றென்றும் வீண்செலவுக்கு நமது மக்கள் மீளாத அடிமையாகிப் பரிதவிப்பதைத் தவிர விமோசனத்துக்கு வழியில்லை.

## சிதம்பரனாரின் அரசியல் ஞானம்.

சென்ற புதனன்று ஹைஸ்கூலில் நடைபெற்ற ஓர் கூட்டத்தில் தலைமை வகித்து இவ்வூர் முனிஸிபல் சேர்மன் ராவ்பகதூர் சிதம்பரஞ் செட்டியார் அரிய உபந்யாசமொன்றைச் செய்திருக்கிறார். அதன் முழுவிபரம் மற்றொரு பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. திரு செட்டியாரவர்களுக்கு லோகல் போர்டுகளில் அங்கம் பெறுதல், ஓட்டர் லிஸ்ட் தயாரித்தல், அவைகளைத் திருத்தல், மெம்பர்களுடன் தகராறுபடல், எலெக்ஷன் நடத்தல் திருப்பூட்டல், பஞ்சாயத்து செய்தல், முதலிய வற்றில்தான் அதிகத்திறமையும் ஞானமும் உண்டென்பதை நாமறிந்திருந்தோம். அரசியல் நெறியில் அபாரமான ஞானம் அவர்கட்குண்டென்பது இந்தக் கூட்டத்திலிருந்துதான் வெளியாகியிருக்கிறது. திரு. செட்டியாரவர்களால் தேச சரித்திர தத்துவங்களும் இந்திய ஆட்சி முறையின் நுட்பமான பெருமைகளும், ஆங்கிலேயரின் அபாரகருணையும், இந்தியரின் இழிவுகளும் அழகாக வெளியிடப்பட்டுள்ளன. சில வற்றை இங்கு விரித்துப்பார்ப்போம். "படிப்புக்கு ஏராளமான வசதிகள் ஏற்பட்டு கல்வியிலும் நாடு நாளுக்கு நாள் ஓங்கிவருகிறது" என்று தலைவர் கூறுகிறார். ஜில்லா கலெக்டர் காரைக்குடியில் கல்வி குறைவாக இருப்பதற்கு என்ன பரிகாரம் செய்யப்போகிறீர்களென்று கேட்டபோது இதே தலைவர் (முனிஸிபாலிடியிலிருந்து) இந்த ஊரில் மெ. செ. பெண்பள்ளிக்கூடமிருக்கிறது. அது போதும்" என்று எழுதி விட்ட கதையை ஞாபகத்துக்குக் கொண்டு வர விரும்புகிறோம். ஆங்கிலேயர் இந்த நாட்டை ஆள ஒருப்பட்டு ஆண்டு நூற்றைம்பதாகிறது. கல்வியில் எவ்வளவு அபிவிருத்தியாகியிருக்கிறதென்பதை திரு செட்டியார் அறிந்திருக்க முடியாதுபோனது பரிதாபம்.

காரைக்குடி நகரசபை நிர்வாகத்தைத் தம்மால் ஒற்றுமையாக நடத்த முடியவில்லையென்பதற்காக இந்தியாவிலுள்ள எல்லாருக்கும் திறமையில்லையென்று கூறுவது பொறுக்கக் கூடிய விஷயமன்று. காரைக்குடி நகரசபை பொது ஜனங்களில் பணத்தை வசூலித்துப் பாழாக்கவே இருக்கிறதென்பதை நாம் கூறவேண்டியதில்லை. இதை ஒற்றுமையாகவும், ஒழுங்காகவும் நடத்த முடியவில்லை யென்று அதன் தலைவரான ராவ்பகதூர் செட்டியாரே கூறுகிறார். இவ்வளவு கஷ்டப்பட்டுக்கொண்டு போலீசாரையும் உதவிக்கு வைத்துக்கொண்டு நடத்த வேண்டிய அவசியம் என்ன வந்துவிட்டதென்று நாம் கேட்கிறோம். ஒழுங்காக நடத்த முடியாவிட்டால் அந்தப் பதவியை ராஜிநாமா செய்வது தானே நேர்மையாகும். காரைக்குடி முனிசிபாலிட்டி நிர்வாகத்தை ஒழுங்காக நடத்த திரு. செட்டியாரவர்கட்குத் திறமையில்லாமலிருக்கலாம். அதை வெகு திறமையாக நடத்தக் கூடிய பலர் காரைக்குடியிலேயே உண்டென்பதை முனிசிபல் ஆட்சியை வாழ்க்கையின் நோக்கமாகக் கொள்பவர் கைவிடுவார்களானால் கண்ணாரக் காணலாம். காரைக்குடி முனிசிபாலிட்டியை வைத்து இந்தியாவின் தகுதியை ஆராய்வது நகைப்பிற் கிடமாகுமன்றி வேறன்று. ராவ்பகதூர் சிதம்பரஞ் செட்டியாரவர்கட்கு நன்கு விளங்கும்படி ஒரு உதாரணங் கூறுகிறோம். இந்திய தேச ஆட்சி முறையின் எல்லா இலாகாவும் இப்பொழுது பெரும்பான்மை இந்தியராலேயே நிர்வகிக்கப்படுகின்றன. ஒவ்வொரு ஜில்லாவிலும் பெரிய உத்தியோகஸ்தரில் சுமார் நாலைந்துபேர் தவிர மற்றெல்லா உத்தியோகஸ்தர்களும் இந்தியர்களேயாவர். இவர்கள் வசமுள்ள உத்தியோகங்கள் யாவும் சிதம்பரஞ் செட்டியாரின் முனிசிபாலிட்டி மாதிரி சீரழிகின்றனவா? ஊழலாக நடக்கின்றனவா? இந்தியர்களிலேயே கவர்னர் இந்தியா உதவி மந்திரி உத்தியோகம் வரை பார்க்கக்கூடிய பேறிஞர் உண்டென்பதை வெள்ளைக்காரரே ஒப்புக்கொண்டிருக்கின்றனர். திரு படேல் பார்லிமெண்டின் தலைமைப் பதவிக்கும் தகுதியானவ ரென்பதை யாரால் மறுக்க முடியும். ஜில்லா சூப்பரிண்டெண்டுகளாகவும் கலெக்டர்களாகவும் இருந்து நிர்வகிக்கும் போாற்றல் பெற்ற இந்திய உத்தியோகஸ்தர் எண்ணற்றோர் உண்டு. இவை நமது சிதம்பரனார்க்கு விளங்கவில்லை. விளங்காது.

"௧௯௧௯ வருஷத்து சீர்திருத்தங்கள் வந்ததும் நாம் ஒத்துழையாமையில் பிரவேசித்தோமே! அதில் ஏதாவது பலன் கிடைத்ததா?" என்று ராவ்பகதூர் செட்டியார் கேட்கிறார். இவர்கள் ௧௯௧௯-ல் ஒத்துழையாமைப் போரில் கலந்திருந்தார்களா? எந்தப் பக்கத்துப் பட்டாளத்துக்குக் கமான்டராக இருந்தார்கள்? இவர்கள் வாயில் இம்மாதிரியான உரைகள் வருவது பொருந்துமா வென்பதே நமது கேள்வி.

உப்புச் சத்தியாக்கிரகத்தில் நம்பிக்கை கொண்டவர்களும் நம்பிக்கையற்றவரும் நாட்டில் இருக்கின்றனர். பல விதமான அரசியல் கட்சிக்காரரும் இருக்கின்றனர். ஆட்சி முறைகளிலும் சுதந்திரத்திலும் சிறிது வேறுபாடுகளை விரும்புகின்றனர். அது வேறு விஷயம். அப்படியே திரு. ராவ்பகதூர் செட்டியாரும் "ஆங்கில ஆட்சியே இருக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டிருக்கட்டும். ஆனால் வரம்பு கடந்து பேசுவது முறையன்று. சட்டமறுப்பைப்பற்றிச் சொலலும் போது "வேறு வேலையில்லாதவர்களும் வீண் புகழுடைய விரும்பியவர்களும் வயதாகாத வாலிபர்களுமே இந்த இயக்கத்தில் கலந்திருக்கிறார்கள்" என்று கூறுகிறார். இக்கூற்று மகாத்மாகாந்தி, நேரு, தயாப்ஜி, ஜம்னாலால்பஜாஜ், சரோஜினி, படேல் போன்றவர்களைவிட அதிகமானவேலையுடையவரும் உண்மைப் புகழையடைய விரும்பியிருப்பவரும், வாலிபரல்லாதவருமான ராவ்பகதூர் சிதம்பரஞ் செட்டியாரின் திருவாக்கிலிருந்து பிறந்திருப்பது கவனிக்கத்தக்கது. வாலிபர்களைக் குறை கூறுவது திரு. செட்டியாரவர்களின் அருங்குணங்களிலொன்று போலும்! வயதுமுதிர்ந்த கிழவர்களால் எந்த நாட்டிலும் இதுவரை எதுவும் நடந்ததில்லை. இளவாலிபர்களாலேதான் ஒவ்வொரு பயனும் கிடைத்திருக்கிறதென்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

## எண்டிசைக் காட்சி

### சைமன் ரிப்போர்ட்.

ஏராளமான பொருளைச் செலவு செய்து சைமன் கோஷ்டியார் வெளியிட்ட அறிக்கை இந்திய அரசியல்



வாதிகளின் திருப்தியைப் பெறமுடியாமற் போய்விட்டது. சைமன் குழு இங்கு வருமென்று தெரிந்தது முதல் எதிர்ப்புக் கூட்டமும் வேலைசெய்து தான் வந்தது. எனினும் சைமன் குழு நாடுமுற்றும் சுற்றிக் கடைசியில் தமது அறிக்கையையும் வெளியிட்டுவிட்டது. 'குடியேற்ற நாட்டந்தஸ்துக்குக்' குறையாமல் வேண்டுமென்று எல்லா அரசியல் கட்சியாரும் விரும்பினர். ஆனால் கமிஷனின் அறிக்கைக்கும் அதற்கும் சம்பந்தமே இல்லாத நிலையில் அமைந்துவிட்டது குறிப்பிடத்தக்கதாகும். கொடுக்கவேண்டுமென்று சொல்லும் உரிமைகளை அனுபவிக்கும் தன்மையில், முஸ்லீம்கட்கும் பிறருக்கும் வகுப்பு வாரியாக வசதி செய்யும்படி வழிகாட்டியிருப்பது வரவேற்கத்தக்கதாகும். பொதுவாக நோக்கும்போது சைமன் குழுவின் அறிக்கையில் தகுந்த பயனைக் காணலாமென்று எதிர்பார்த்தவர்களும் ஏமாற்றமடையும்படியான நிலைமைதான் கடைசியில் ஏற்பட்டிருக்கிறது. வட்டமேஜை மகாநாட்டில் இந்த அறிக்கையையும் ஒரு முக்கியமான ரிக்கார்டாகவைத்து ஆராய்தல் கூடும். வட்டமேஜை மகாநாடு பொறுப்புள்ள அங்கத்தினரைப் பெறுமானால் அதனால் பயனேற்படக்கூடும் கௌரவத்தை விரும்பிமட்டும் செல்ல சந்தர்ப்பம் வாய்க்குமானால் இந்த அறிக்கையளவுக்குக் கீழேயும் போகக் கூடுமென்று சொல்லவேண்டியதில்லை.

### வைதீகத்துக்கு ஆதரவா?

முசிறியில் திரிச்சி ஜில்லா கலெக்டர் திரு. ராமராவின் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றிருக்கிறது. அக்கூட்டத்தில் பலர் பேசியிருக்கின்றனர். காங்கிரஸ் கட்சியைத் தாக்கி ஒருவர் பேசியிருக்கிறார். அதே கூட்டத்தில் ஒரு சாஸ்திரியார் சாரதா சட்டத்தைக் கண்டித்தும் பேசினாராம். சட்டமறுப்பு இயக்கத்தைக் கண்டிப்பதும்; சட்டத்தைக் கண்டிப்பதும் ஒரே கூட்டத்தில நடந்திருப்பது வியப்பிற் குரியதாகும். காங்கிரசைக் கண்டித்து எதிர்ப்பிரசாரம் நடத்துவதுடன் சாரதா சட்டத்தையும் கண்டிப்பதின்காரணமென்னவோ? வைதீகரின் ஆதரவைப் பெறவா? அல்லது பார்ப்பனரின் அனுதாபத்தைப் பெறவா என்பது விளங்கவில்லை.

### சென்னைச் சட்டசபை.

சமீபத்தில் நடைபெறவிருக்கும் சென்னைச்சட்டசபையின் தேர்தலில் இராமநாதபுரம்ஜில்லா மகமதியரல்லாத தொகுதியிலுள்ள இரண்டு ஸ்தானங்களில் ஒன்றுக்கு திவான்பகதூர் அ. மு. மு. முருகப்ப செட்டியாரவர்கள் அபேக்ஷகராக நிற்பதாக அறிகிறோம். அவர்களைப்பற்றி நாம அதிகமாக ஒன்றும் கூற வேண்டியதில்லை. தேர்தலில் அவர்கட்கு வெற்றிகிடைக்கும்படி யாவருடைய ஆதரவையும் நலகவேண்டுமென்று விரும்புகிறோம்.

### சம்பாவனை.

காரைக்குடி திருவாளர் சி. முரு. நாராயணன் செட்டியாரவர்கள் நேற்று நடைபெற்ற தமது புதல்வன் திருவளர் செல்வன் முருகப்பன் காப்புக் கட்டுப் புதுமையில் நமது குமரனுக்கு ரூபா ஐந்து சம்பாவனை செய்து அனுப்பியுள்ளார்கள். அவர்கட்கு நமது நன்றி உரியதாகுக.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சன்னை உண்டியல் வட்டம் | 0—௨—1 |
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | 0—௪0—0 |
| பவுன் விலை | ௧௯—௪0—0 |
| வெள்ளிக் கட்டி | ௪௮—0—0 |
| சென்னை ஆனிமாத நடப்பு வட்டி | 0—௩0—0 |
| மலாய்நாட்டு உண்டியல் | |

விலை விற்பது நூற்றிஐம்பத்தெட்டு

மேற்படிவாங்குவது நூற்றிஐம்பத்தமூன்று இங்கிலாந்து பாங்குவட்டி மூன்று பெர்ஸென்று

இம்பீரியல் பாங்குவட்டி ஆறு பெர்ஸென்று

**நலவுரிமைத் தொண்டர் சங்கம்:**—இச்சங்கத்தின ஆராய்ச்சிக் கூட்டம் வழக்கம்போல் சென்ற சனிக் கிழமை நடைபெற்றது. பலர் விடாமுயற்சி என்ற பொருள்பற்றிப் பேசினர். வருகிற சனிக் கிழமை மதுபானமென்ற விஷயத்தைப்பற்றி சொற்பொழிவு நிகழும்.

**திருவிழா:**—இவ்வூரைச் சேர்ந்த நாகநாதபுரம் சிவன்கோவிலில் இன்று முதல் திருவிழா ஆரம்பமாகியிருக்கிறது.

## தந்திச் செய்தி.

இரங்கூன் ஜூலை உ-உ

| | |
|---|---|
| படகு நெல் | ௧௫௧, ௧௫௩ |
| ரயில் நெல் | ௧௫0, ௧௫௨ |
| பெரியமில் ஸ்பெஷியல் | ௩௮0 |
| நாசேன் சிறியமில் அரிசி | ௩௯௨—௮ |
| நாசேன் யஸ்க்யூ | ௪0௭—௮ |
| மீடான் (ஜார்) | ௩௯௭—௮—௪00 |
| யஸ்க்யு மீடான் | ௪௧௫ |
| பழய பவுன் | ௧௩—௧௧—0 |
| புதிய பவுன் | ௧௩—௧௧—௩ |
| தவணை வட்டி | 0—௭—௯ |
| நடப்புவட்டி | 0—௮—0 |

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்கு பிரயாணமாகும் விபரம் வருமாறு—

| கப்பல் | புறப்படும் தேதி |
|---|---|
| எஸ். எஸ். ஸாங்கியா | ஜூலை ௫உ |
| எஸ். எஸ் எரின்பூரா | „ ௮உ |
| எஸ். எஸ். ரோனு | „ ௧௩உ |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டிணம் வந்துசேரும் விபரம் வருமாறு:—

| கப்பல் | வந்துசேருந்தேதி |
|---|---|
| ஸாங்கிய | ஜூலை ௯உ |
| ரோனு | „ ௩உ |
| எரின்பூரா | „ ௭உ |

கப்பல்கள் புதுச்சேரியிலிருந்து செய்கோன் சிங்கப்பூர் முதலியவிடங்கட்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| அஸேலிரிடோ | ஜூலை ௯உ |
| அம்பாயில் | ஆகஸ்ட் ௯உ |

### ஸ்தல ஸ்தாபனச் சட்டங்கள்.

லோகல் போர்டு சட்டத்தையும், ஜில்லா முனிசிபலிட்டிகள் சட்டத்தையும் திருத்துவதற்கு சென்னை சட்டசபை நிறைவேற்றிவைத்த மசோதாக்களை கவர்னர் ஜெனரல் அங்கீகரித்துவிட்டதாகத் தெரிகிறது. இவ்விரண்டு சட்டங்களையும் பிரசாரம்செய்து, காலதாமதமன்னியில் இவைகளை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமெனபதே மந்திரிகளின் உத்தேசம். ஆனால் இன்னும் சில மாதங்கள் வரை தேர்தல்கள் நடைபெறுமென்றும், பொதுத் தேர்தல்கள் முடிவுபெறும் வரை அவை சம்பந்தமான ஏற்பாடு செய்யப்படமாட்டாதென்றும தெரிகிறது.

## உபதேசத்துக்குச் சில நிபந்தனைகள்.

உபதேசங் கேட்கச் சில வாலிபர் மறுத்துவிட்டனரென்று தெரிகிறது சில வாலிபர்களுக்கு அவர்களின் பெற்றோர் சில நிபந்தனைகள் விதிக்க முன்வருகின்றனரென்றுந்தெரிகிறது. கதர் வேட்டி கட்டியிருக்கக்கூடாது; மடித்தாவது ஒற்றைத் தட்டாகவாவது வேட்டி கட்டக் கூடாது; என்பன அவற்றுள் முக்கியமானவை. இவ்விஷயங்கட்கும் உபதேசத்திற்கும் சம்பந்தம் என்னவோ? சிலர் "உபதேசத்தைக் கேட்டுவிடு; பின்னால் இஷ்டமிருந்தால் குழைத்துப் பூசலாம், இல்லாவிட்டால் உன் இஷ்டம்" என்று சொல்லியே சிபார்சு செய்ய முற்படுகின்றனர், இதுவரை உபதேசங் கேட்டவரில் பலர் விபூதியைத் தொடுவதே கிடையாது. இன்னும் சிலர் நெற்றியிலும் கையின் மணிக்கட்டிலும் மட்டுமே பூசிக்கொண்டு கிழவர்களை யேமாற்றுகின்றனர். உபதேசங் கேட்டவர் தினந்தோறும்குழைத்துப் பூச முடியாவிட்டால் பசுமாட்டின் காதில் மந்திரத்தைச் சொல்லிவிட்டுச் சும்மா இருக்கலாமென்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறதாம். சாஸ்திரம் பூசுவதற்கும் பேசுகிறது; வேண்டாமென்பதற்கும் பேசுகிறது.

ஒரு வாலிபன்.

## பண்டித மோதிலால் நேருவும் சிறை புகுந்தார்.

### ஆறு மாதம் வெறுங் காவல்.

சட்ட விரோதமான ஒரு ஸ்தாபனமாகிய காங்கிரஸ் காரியக் கமிட்டியில் அங்கத்தினராக இருந்ததாகவும் ராஜப் பிரதிநிதி பிறப்பித்துள்ள அவசரச் சட்டங்களைப் பொது ஜனங்கள் மீறும்படி தூண்டியதாகவும் பண்டித மோதிலால் நேரு மீதும் டாக்டர் சையத் மகமத் மீதும் கொண்டுவரப்பட்டிருந்த வழக்கு ஜூலை ௧ந்தேதி ஜில்லா மாஜிஸ்திரேட்டால் விசாரிக்கப்பட்டது தலைவர்கள் இருவரும் கோர்ட்டாரின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல மறுத்துவிட்டனர். மாஜிஸ்திரேட் இரண்டு தலைவர்கட்கும் தலா ஒவ்வொரு குற்றத்திற்கும் ஆறுமாதம் வெறுங்காவல் தண்டனை விதித்துதண்டனைகளை ஏக காலத்தில் அனுபவிக்க வேண்டுமென்று தீர்ப்புச் செய்தார்.

### காங்கிரஸ் தலைவர் நியமனம்.

சர்தார் படேலிடம் வேண்டுகோள்.

சிறை சென்ற பண்டித மோதிலால் நேரு தமக்குப் பிறகு காங்கிரஸ் அக்கிராசனர் பதவியில் சர்தார் வல்லபாய் பட்டேலை நியமித்திருக்கிறார்.

### ஸ்திரீகள் மறியலில் புதியவழி.

ஜூன் உ௭ தேதி இரவு ௮-௩0 மணிக்கு லாகூரிலுள்ள ராவ்சாகிப் போலாராம் சீமைச்சாராயக் கடையில் நடத்திய மறியலில் பெண்கள் புது முறை யொன்றைக் கையாடினார்கள் பல ஸ்திரீகள் போலீசார் அணி இருக்கவரையில் சென்று கடையின் சொந்தக்காரர் செத்துப் போயிருந்தால் எவ்வாறு மாரடித்து அழுவார்களோ அது போலவழுதார்கள். போலீசார் என்ன செய்தும அவர்கள் அசையவில்லை- முடிவில் கடையடைத்தபிறகு தான் அவர்கள் திரும்பிப் போனார்கள்.

### ஷோலாபூரில்ராணுவ ஆட்சி

ஷோலாப்பூர் நகரிலிருந்து ஜூன் மாதம் ௩0-தேதி இரவு ௧௨ மணி முதல் ராணுவ ஆட்சி வாபீஸ் வாங்கிக்கொள்ளப்படுமென்று இந்தியா கெஜட்டின் விசேஷப் பிரசாரம் கூறுகிறது.

## ராமநாதபுரம் ஜில்லா போர்டு.

இந்த போர்டின் மாதாந்தரக் கூட்டம் ஜூன் உ௮ தேதி காலை தலைவர் ஸ்ரீமான் வ.பு.அ. சௌந்திரபாண்டியனவர்கள் தலைமையில் மதுரையில் கூடிற்று.

பரமக்குடி யூனியன்போர்டில் சில ஒழுங்கீனங்கள் நடைபெற்ற நிர்வாகம் சரிவர நடத்தாததினால் அந்த யூனியனை ௧௯௨0-ம் வருத்திய லோகல்போர்ட்ஸ் ஆக்ட் ௪௫ (௧) வது பிரிவுப்படி கலைத்துவிடுவ தென்றும் நடவடிக்கை நடத்துவ தென்றும் தீர்மானிக்கப்பட்டது.

முதுகுளத்தூர் பேயூர் ரஸ்தாவைச் செப்பனிட ௧௯,000 ரூபாயும், கோவிலூர், குன்னக்குடி ரஸ்தாவுக்கு ௧௫000 ரூபாயும், காரைக்குடியிலிருந்து சூரக்குடிக்குப் போகும் ரஸ்தா சம்பந்தமாக தேவகோட்டை தாலுகா போர்டுக்குச் சேரவேண்டிய ௩,000 யும், ஏற்கனவே ௪0 ஆயிரத்திற்கு மேல் செலவிடப்பட்ட ராமநாதபுரம் தேவிபட்டணம் ரஸ்தாவை ரிப்பேர் செய்ய ௧௪,000 ரூபாயும், மற்றும் போர்டின் ஆதிக்கத்திலுள்ள பல ரஸ்தாக்களைச் செப்பனிட ௫௧,௫௪0 ரூபாயும், ரஸ்தாக்களிலுள்ளமாச்சேஸ்களின் பரிபாலனத்திற்காக சுமார் ௬௮௫0 ரூபாயும், சாங்ஷன் செய்யப்பட்டதுடன், முசாபரிபங்களாக்களின் ரிப்பேர்களுக்காயும், சக்கச்சாவடிகளைப் புதிதாய்க் கட்டுவதற்கும் எஸ்டிமேட்டுகள் சாங்ஷன் செய்யப்பட்டன.

பாலாற்றின் மீது ஒரு பாலங்கட்டுவதற்கு உ௯,000 ரூபாயும் தொண்டிக்குப் பக்கத்திலுள்ள மணிமுத்தாறு ஆற்றில் ஒரு பாலங்கட்ட ரூபாய் உ௪,000-மும் பல பாலங்களைச் செப்பனிடுவதற்கு எஸ்டிமேட்டுகளும் சாங்ஷன் செய்யப்பட்டன.

சாதாரணக் கூட்டம் முடிந்தவுடன் ஸ்பெஷல் மீட்டிங்கு நடைபெற்றது. மறவர் நாடுகளான தேவகோட்டை தேவிபட்டணம் ரோடு போடுவதற்கு ௧௩௫௩௫-ரூபாயும் கமுதி மண்டபசாலை ரோட்டிற்கு ௩௫௯௪௫-ரூபாயும் ஆக ௫0,000-ரூபாய் ரஸ்தாக்கள் போடுவதற்காக ரெயில்வே செஸ்பண்டிலிருந்து செலவழிப்பதென்று தீர்மானிக்கப்பட்ட சாங்ஷன் உறுதி செய்யப்பட்டுக் கூட்டம்கலைந்தது.

## தந்திக்கட்டண உயர்வு யோசனை.

### வங்காளப்பத்திரிகைக் காரர் சங்கக் கண்டனம்.

இந்தியப் பத்திரிகைக்காரர் சங்கத்தின் வங்காளக்கிளையினுடைய கூட்டம் ஒன்று நடை பெற்றது. அதில் பத்திரிகைகளுக்கான தந்திக்கட்டணங்களை உயர்த்த வேண்டுமென்ற தந்தி—தபால் இலாகா டைரெக்டர் ஜெனரல் செய்துள்ள பிரேரேபணையைப்பலமாகக் கண்டித்துத் தீர்மானமொன்றுசெய்யப்பட்டது. இந்தயோசனைப்படி செய்யப்பட்டால் அது இந்தியப்பத்திரிகைகளின் சர்தாதர் தொகையையும் அவை வெளியிட்டுவரும் செய்திகளையும் குறைத்துப் பத்திரிகைகளுக்கு இன்னும் அதிகத் தீங்கு விளைவிக்குமென்று தீர்மானத்தில் கூறப்பட்டிருக்கிறது.

## அன்னிய ஆடை பஹிஷ்காரம்.

மாதமொன்றுக்கு ௯௦ லட்சம் ரூபாய்க்கு ஜவுளிவியாபாரம் செய்கிற மதுரை வியாபாரிகள் ஜூன் உ௭தேதி ஒன்றுகூடி அன்னிய நாட்டுத் துணிகளை இறக்குமதி செய்யவும் உற்பத்தி செய்யவுஞ்செய்கிறஏஜெண்டுகளோடு தாங்கள் எவ்விதசம்பந்தமும் வைத்துக்கொள்வதில்லையென்று வாக்களித்திருக்கின்றார்கள்.

## மதிப்புரை.

கோ. லெட்சுமிபுரம் உயர் திருவாளர் ந. சொ. அருணாசலச் செட்டியாரவர்களால் நடத்தப்பெற்றுவரும் "சொக்கலிங்க வித்தியாசாலையின் நாலிது வருட அறிக்கை வரப்பெற்றோம். அதில் சிறுவர் சிறுமியருக்குத் தமிழ்க் கல்வி, சங்கீதம், இலக்கணம், இலக்கியம், கணக்கு, சித்திரம், தேகாப்பியாசம், விளையாட்டு, சுகாதாரம், நூல் நூற்றல், ஆங்கிலம், உலக அறிவு, ஆகியவைகள் வளர்க்கப் பெறுகின்றன. பல வஸ்துக்களைச் சேர்த்து மியூசியம் ஒன்று ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றது. மாணாக்கர் மாணாக்கியர் பிரசங்கம் செய்யப் பழகுகின்றனர். சென்ற ஆண்டுகளில் "அசோகன் அறமன்றம்" "சிவகாமி சரித்திரம்" என்ற நாடகங்களை நடித்தனர். செட்டிமார் நாட்டு ஆரம்பப் பாடசாலைகளின் போட்டிப் பந்தயவிளையாட்டில் மூன்று வெள்ளிக் கப்புகளும் இரண்டு தங்க மெடல்களும் இரண்டு வெள்ளிமெடல்களும் பரிசாகப் பெற்றனர். "திருக்குறள்" "பாரதி பாடல்" "இராட்டினம்" "கட்டுரை" "சங்கீதம்" "நடிப்பு" ஆகியவைகளில் சிறந்து விளங்கினர். கும்மி, கோலாட்டத்தின் திறமை குறிப்பிடத்தக்கது. அறிக்கையில் டை வித்யாசாலையை இன்னும் திறமையான முறையில் நடத்தவும் பல அரிய விஷயங்களைக் குழந்தைகட்குப் புகட்டவேண்டிய சிறப்பான வேலைகளைச் செய்யவும் காற்றோட்டமும் விளையாட்டிற்கு வசதியும் கூடியதாயுள்ள விசாலமான இடத்தில் புதுக் கட்டிடம் ஒன்றை அமைக்கவும் ஏற்பாடுகள் நடைபெறுகின்றன எனக் குறிப்பிட்டிருப்பதை நோக்குவோர் மகிழாதிருக்க முடியாது.

---



## இந்திய இளைஞர் சங்க ஆண்டுவிழா.

சொ. முருகப்பர் தலைமை வகிப்பார்.

திருத்துறைப்பூண்டி இந்திய இளைஞர் சங்கத்தின் முதல் ஆண்டுவிழா போர்டு ஹைஸ்கூலில் ஜூலை ௬-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை காரைக்குடி குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பர் தலைமையில் நடைபெறும் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

### கொத்தமங்கலத்தில் கும்பாபிஷேகம்.

இவ்வூர் திரிபுரசுந்தரி அம்பா சமேத தம்மணீச்சுரமுடையார் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் ஆனி மீ ௨௭-தேதி வெள்ளிக்கிழமை காலை ௬-இ நாழிகைக்குமேல் ௧௦-இ நாழிகைக்குள் நடைபெறுமென்று கொத்தமங்கலம் நகரத்தார் அறிவிக்கிறார்கள்.

## உள்ளூர் முனிஸிபாலிட்டி

### தடையுத்தரவு.

இப்போது முனிஸிபல் கௌன்ஸிலராக இருந்துவரும் ஜனாப் ச. பி. ந. மு இப்ராஹிம் சாஹெப் பகதூர் அவர்கள் பெயரை ஓட்டர் ஜாபிதாவிலிருந்து நீக்கியது பிசகென்றும் சேர்த்துக்கொள்ள வேண்டுமாயும் பிறவும் கேட்டுச் செய்யப்பட்டிருக்கும் விவகாரத்தில் ஜூலை ௪-௨ வரை வோட்டர் ஜாபிதாவைப் பிரசுரிக்கக் கூடாதென்று ஆர்டராகி இருக்கிறது. விசாரணைக்கு ௪-ந் தேதி வாய்தா ஏற்பட்டிருக்கிறது.

### ஆருடத்தின் மகிமை.

எதிர்காலத்தைப்பற்றிய 5 கேள்விகளுக்குப் பதில் எழுத ரூ. 1. மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணா 4. கடிதம் எழுதும் போதுள்ள நேரத்தை குறிப்பிடவும்.

வி. கே. சடகோபாச்சாரியா.
திருத்தணி இந்தியா.







## சர்வதேச சங்கம்

### இந்திய பிரதிநிதிகள்.

சமீபத்தில் நடைபெறப்போகும் சர்வதேச சங்க மகாநாட்டிற்குச் செல்லும் இந்தியப்பிரதிநிதிகள் இன்னாரென நிச்சயித்தாகிவிட்டது. பிகானர் மகாராஜா இந்தியபிரதிநிதிகளுக்கு தலைமைபூண்டு மகாநாட்டுக்கு அழைத்துச் செல்லுவார். இந்தியா மந்திரி காரியாலயத்திலுள்ள ஒரு பிரபல ஐரோப்பியரை அப்பிரதிநிதிகளுக்குச் சட்ட ஆலோசனை கர்த்தாவாக நியமிப்பார்கள் என்று தெரிகிறது. இப்பிரதிநிதி சபைக்கு திரு ஜி. எஸ் பஜ்பை காரியதரிசி. சர் டெனிஸ்பிரே, மியான் சர்ப்பஜ்லி ஹூசெயின், சர் ஏ. பி. பத்ரோ காவாஸ்ஜி ஜிஹாங்கீர் (ஜூனியர்) இவர்கள் பிரதிநிதிகளாகச் செல்லுகின்றனர். இவர்கள் முதலாவது லண்டன் சென்று, குடியேற்ற நாட்டு மந்திரியுடன்கலந்து பேசிவிட்டு ஜினிவாவுக்குப் பிரயாணமாவார்கள்.

---

### கொத்தமங்கலம்.

**மாணவர் கழகம்:**—சென்ற ஞாயிறன்று மாலையில் ஆளுடையார் கோவில் திரு. சாமிநாத சாஸ்திரியார் அவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் கூடியது. சு. பழனியப்பன் வீ. பெரியகருப்பன் ஆகியவர் பேசினர் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

---

### ஸ்கூல் பைனல் பரீக்ஷை முடிவு.

ஸ்கூல் பைனல் பரீக்ஷையில் பலர் தேறுமலிருப்பதைப்பற்றி யோசிக்க சென்னை ஸர்வகலாசாலை சிண்டிகேட் ஆனி ௬௪ கூடியது. எல்லாப்பாடங்களிலும் 36% வீதம் வாங்கியவர்கள் தேறிவிடுவார்கள். 3 பாடங்களில் 35% ம் இரண்டு பாடங்களில் 34% ம் மொத்தம் 175 மார்க்கும் வாங்கியவர்களும் தேறிவிடுவார்கள். 4 பாடங்களில் 35% ம் 5-வது பாடத்தில் 25%ம் மொத்தத்தில் 250 மார்க்கும் வாங்கியவர்களும் தேறிவிடுவார்கள் என்று முடிவு செய்யப்பட்டது.

### அமெரிக்காவில் காந்தி நிதி.

'யூனிட்டி' என்ற அமெரிக்கன் பத்திரிகை காந்திநிதி யொன்றை ஆரம்பித்திருக்கிறது ஏராளமாக தினமும் டாலர்கள் வந்து குவிந்துகொண்டிருக்கின்றன, இந்தப் பணத்தை இந்தியாவில் சிறை சென்றவர்களுடைய போஷணைக்காக அனுப்பவேண்டுமென்று நினைக்கிறார்கள்.

### பி. அழகாபுரி.

இவ்வூர் ஸ்ரீ கலங்காதகண்ட விநாயகர் பத்தடிமாவில் நாளது ஆனி மீ ௨௨ முதல் டோரணமெண்டு ஆரம்பமாகி நடைபெறுகிறது. அதில் சில ஜதைகள் கலந்து கொண்டிருக்கின்றன. நல்ல முறையோடு நடைபெறுகிறது.

---

### சினிமாவில் டான்ஸ்.

காரைக்குடி வெற்றிவிநாயகர் ஹாலில் நடைபெறும் நப்பு சினிமாவில் இன்று முதல் மூன்று நாட்களுக்கு படக்காக்ஷிகளோடு, சினிமா மேடைகளில் புகழ்பெற்ற மிஸ். விக்டோரியா மிஸ், ப்ளான்ஸி என்னும் பெண்மணிகள், இனிமையான கானங்களுடன் பலவித டான்ஸ்கள் ஆடுவார்கள்.

---





## சைமன் கமிஷன் சிபார்சு.

(அ-ம் பக்கத் தொடர்ச்சி.)

யில் சேர்வதற்கு இப்பொழுதே வழி வகுத்து வைக்கவேண்டும். இவ்விஷயமாக கமிஷனர்கள் சமஸ்தான மன்னர்கள் அபிப்பிராயங்களை அறியவில்லை அதனால் கூடப்போகும் வட்டமேஜை மகாநாட்டிலே அவ்விஷயத்தைப்பற்றி முடிவு செய்ய வேண்டும்.

### ஐக்கிய அரசாங்கம் வேண்டுவதேன்.

இறுதியில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் சுதேச சமஸ்தானங்களுக்கும் பொதுவான ஒரு அரசியல் அமைப்பு ஏற்படுத்தும் பிரச்சினையைத் தவிர பிரிட்டிஷ் இந்திய அமைப்பையே ஐக்கிய அரசாங்கமாக்குவதற்குப் போதிய காரணங்கள் இருக்கின்றனவென்றும் கமிஷனர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். அவர்கள் கூறுவதாவது:—ஒரு தனி அதிகாரத்துக்குட்பட்ட அரசாங்கம் ஐக்கிய அரசாங்கமாக மாறுவது இயற்கை விரோதமான சம்பவம் என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிறோம் ஐக்கியப்பட்ட அரசாங்கங்கள் ஒருமுகப்பட்டு ஒரு அதிகாரத்துக்குட்பட்ட அரசாங்கமாகவே முயற்சி செய்கின்றன. ஆகவே, அந்த இயற்கை முறைக்கு மாறான ஒரு சிபார்சை இப்பொழுது செய்யக் காரணமென்னவென்று கேட்கப்படலாம். அதற்கு இந்தியப் பிரச்சினையின் விசேஷத் தன்மையே காரணமாகும். இந்தியா ஏகாதிபத்தியத்திலிருந்து ஜனநாயகத்தை யடையமுயன்று கொண்டிருக்கின்றது. சுமார் கோடி பிரிட்டிஷ் ஜனங்களுக்குப் பொருத்தமான ஒரு அரசியல் திட்டம் லட்சம் கிராமங்களடங்கிய ஒரு பூகண்டத்துக்கு ஒப்பான இந்தியாவில் வாழும் கோடி மக்களுக்கு பொருத்தமாக இருக்குமென்று கூறுவது அசம்பாவிதமாகும். சுய ஆட்சி உண்மையானதாயிருக்க வேண்டுமானால் ஒரு குறிப்பிட்ட அளவுக்குட்பட்ட அரசியல் உணர்ச்சியுடையவர்களுக்கே வழங்கப்பட வேண்டும். பிரிட்டனில் இருப்பதுபோன்ற ஜனநாயக ஆட்சி இந்தியாவுக்கு வழங்கப்பட வேண்டுமானால் வாக்காளர்களுக்கும் பிரதிநிதிகளுக்கும் மிக நெருங்கிய சம்பந்தம் ஏற்படாவிட்டால் உண்மையான ஜனநாயக ஆட்சி உண்டாகவே செய்யாது.

### மாகாண சுயஆட்சி கேட்பதேன்?

மாகாணங்களில் ஐக்கிய உணர்ச்சி விருத்தியடைந்திருப்பதினால் மாகாண சுய ஆட்சி கேட்கப்படுகிறதாயிருந்தாலும் அதற்கு வேறு பல காரணங்களும் இல்லாமலில்லை. முதலாவது மத்திய சர்க்கார் வெகு தூரத்திலிருக்கிறது. இரண்டாவது மத்திய சட்டசபைக்கு வழங்கப்பட்டிருப்பதைவிட ஜாஸ்தி அதிகாரங்கள் மாகாணச் சட்டசபைகளுக்கு வழங்கப்பட்டிருப்பதினால் அவ்வாறு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரத்தை பூரணமாக அநுபவிக்கும் பொருட்டு மாகாண சுயஆட்சி வேண்டப்படுகிறது. மூன்றாவது சில சிறு பான்மை சமூகங்கள், தாம் பெரும்பான்மையாக வாழும் பிரதேசங்களில் பூரண ஆதிக்கம் செலுத்தி நன்மை பெற விரும்புகின்றன. இதுவன்றியும், தற்கால மாகாண அமைப்பு மாகாண சுய ஆட்சி விருத்தியடைவதற்கு ஏற்றதாகவுமிருக்கவில்லை.

### பர்மா பிரிவினை.

ஆகவே, மாகாணங்களைத் திருத்தியமைக்க கமிஷனர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள். பர்மா இந்தியா தல்லவென்றும், பொது நலத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் ஏற்பட்டிருக்கும் ஒற்றுமையைக் குலைத்துவிட வேண்டுமென்றும் கமிஷனர்கள் கூறுகிறார்கள்.

மேலும் அவர்கள் அபிப்பிராயப்படுவதாவது:—இந்தியாவை ஐக்கியப்படுத்தவில்லையென்றும், புது அரசியல் அமைப்பை ஏற்படுத்து முன் பழைய அரசியல் அமைப்பைத் தகர்த்தெறிவதாகவும் மாண்ட் போர்டு அறிக்கை யெழுதியவர்கள் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். எதிர்காலத்தில் ஒரு புது அரசியல் அமைப்புக்கு அங்கங்களாகப் போகும் ஸ்தாபனங்களுக்கு அவர்கள் புத்துயிரளித்தார்கள். அந்தப் பூர்வாங்க வேலையைப் பூர்த்தி செய்து அத்துடன் எதிர்கால ஐக்கிய அரசியலுக்கு வழிவகுக்கவும் நாங்கள் முயலுகிறோம். அகில இந்தியாவுக்கு பாதகம் விளையாமல் மாகாணங்களுக்கு இயன்றமட்டும் பூரண சுய ஆட்சி வழங்கி எல்லா அதிகாரங்களையும் ஜனப்பிரதிநிதிகளுக்கு விட்டுக்கொடுக்க சைமன் திட்டம் கருதுகிறது.

### வாக்காளர் தொகை அபிவிருத்தி.

வாக்காளர் தொகையை விருத்தி செய்யாமல் அதிகப்படியானசுதந்தரங்களை வழங்கினால் பொது ஜனங்களுக்கு அரசாட்சியில் பங்கில்லாமல் போய்விடுமென்றும், தேச நிருவாகத்தில் பங்கு கொள்ள பொதுஜனங்களுக்கு உரிமை யுண்டென்றும் கமிஷனர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

மாகாணங்களில் பூரணமான பார்லிமெண்டு ஆட்சி முறை வழங்க நாங்கள் ஏற்பாடு செய்திருக்கிறோம். பெரும்பான்மைக் கட்சியார் அரசாட்சியால் விளையும் தீமைகளைத் தடுக்க கவர்னருக்கு விசேஷ அதிகாரங்களும் வழங்கியிருக்கிறோம். சிறுபான்மைக் கட்சியார் பாது காப்புக்கும் சமாதான பரிபாலனத்துக்கும் கவர்னருக்கு வழங்கப்பட்டிருக்கும் இந்த விசேஷ அதிகாரங்கள் இன்றியமையாதனவாகும்.

### மத்திய சட்டசபை பார்லிமெண்டாகாது.

டெல்லி சட்டசபை பரிட்டிஷ் பார்லிமெண்டைப்போல் ஆகிவிடுமென்று எண்ணுவதும் பகற்கனவேயாகும்.

எல்லோருக்கும் பொதுவான சில கடமைகளைச் செய்ய ஐக்கியப்படும் சில அரசியல் ஸ்தாபனங்களின் தொகுதியாகவே வாஸ்தவத்தில் மத்திய அரசாங்கம் இருக்க முடியும். ஆகவே இந்த அரசாங்கத்தை இனிமேல் ஐக்கிய அரசுமுறையை அடிப்படையாகக் கொண்டே உருப்படுத்தவேண்டும். அதாவது கடைசியான ஒரு ஐக்கிய அரசாங்கத்துக்கு மாகாணங்கள் உறுப்பாக அமையவேண்டும். ஆகவே இப்பொழுதே நாம் ஒரு மத்திய அரசாங்கம் ஸ்தாபிக்க முயன்றால் கடைசி அரசியல் அமைப்பு அதன் உறுப்புகளின் போக்குக்கேற்றதாயிருக்கவேண்டுமென்ற கொள்கையை நாம் அலட்சியம் செய்பவர்களாவோம்.

அப்பால் இந்தியா பூரண சுய ஆட்சிக்கு ஆயத்தம் செய்துகொண்டிருக்கையில் சர்க்கார் நிருவாகம் சீர்கெடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதும் முக்கியமானதென்று கமிஷனர்கள் வற்புறுத்துகிறார்கள்.

நல்லரசு ஒருபொழுதும் சுய அரசுக்கு ஈடாகாதென்ற கொள்கையை நாங்கள் எவ்வளவு ஆதரித்தாலும், அராஜக முறையை உண்டுபண்ணும் ஒரு அரசியல் நிருவாக முறையை சிபார்சு செய்ய நாங்கள் தயாரில்லை. இந்திய முன்னேற்றத்துக்கு வெளிநாட்டாரைப்பற்றிய பயம் தடையாக இருந்துவருவதுபோல் உள்நாட்டுக் கலவரங்களும் தடையாகவே இருந்துவருகின்றன.

### உள்நாட்டுக் கலகம்.

இந்தியாவில் உள்நாட்டுக் கலகமில்லாதிருந்த காலம் மிகச் சொற்பமென்றே கூற வேண்டும். தைரியமாகவும் தயக்கமின்றியும் கடனாற்ற வேண்டிய தேவை இந்தியாவிலிருப்பதுபோல் உலகத்தில் வேறெங்குமே இல்லை. இந்தியாவில் வாழும் லக்ஷக்கணக்கான ஜனங்களின் க்ஷேமம் ஒழுங்கான அரசாட்சியிலே அடங்கியிருக்கிறது. இயன்றமட்டும் அதிகப்படியான சுய ஆட்சி முறைகளை வழங்க நாங்கள் தயாராக இருக்கிறோம். ஜனங்களுக்கு பொறுப்பளித்தால் மட்டுமே பொறுப் புணர்ச்சி யுண்டாகுமென்பதை நாங்கள் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் அந்த பொறுப்புணர்ச்சி பெறும் முயற்சியில் அவர்களுக்கு ஆபத் துண்டாகும்படி விட நாங்கள் விரும்பவில்லை. ஆகவே கவர்னர் ஜெனரலுக்கோ கவர்னருக்கோ தாராளமான அதிகாரங்கள் இருக்கவேண்டும். சுயஆட்சிக்குப் பூரண வசதியளிக்க நாங்கள் சம்மதிக்கிறோம். ஆனால், அந்த ஆட்சிக்கு பாதகமேற்பட்டால் அதைபரிக்கக்கூடிய அதிகாரியும் பக்கத்தில் இருந்தே வரவேண்டும். இந்திய சிறுபான்மைக் கட்சியார் மிகுந்தவர். எனவே அவர்களுக்கு பாதுகாப்பிருக்க வேண்டுமானால் கவர்னர்களுக்கும் கவர்னர் ஜெனரல்களுக்கும் ஏராளமான அதிகாரங்கள் இருக்கவேண்டும். ௰௨ வருஷங்களுக்கு முன் சீர்திருத்த அறிக்கை எழுதியவர்களும் மாகாணங்களிற்றான் விரைவான அரசியல் முன்னேற்றத்திற்கு வசதிகள் இருக்கின்றன என்று உணர்ந்திருக்கிறார்கள்.

அறிக்கையின் ௨-ஆது பாகத்தில் கவர்னர் மாகாண சர்க்கார் ஆட்சியைக் குறித்து குறிப்பிட்டிருக்கின்றனர். முதலாவது பாகத்தில் தெரிவித்துள்ள கொள்கை சம்பந்தமாக இப்பாகத்தில்தான் சிபார்சுகள் ஆரம்பமாகின்றன.

கமிஷனர்கள் முதலாவதாக இந்தியாவை மீண்டும் மாகாண வாரியாக பிரிக்கவேண்டுமென்று வற்புறுத்துகின்றனர். அது சம்பந்தமாக சிந்துவையும் முக்கியமாக ஒரியா பாஷை பேசும் ஜனங்கள் வசிக்குமிடத்தையும் பிரிப்பதைக் குறித்துத் தெரிவிக்கின்றனர்.

சிந்துவுக்கு பீகாரிலுள்ள சட்டசபைக் கமிட்டி போன்ற ஒரு கமிட்டி ஏற்படுத்த வேண்டும். புதிய அரசியல் முறையை அமைப்பதற்கு முன்னதாக மாகாணப் பிரிவுமுறையை ஒழுங்குபடுத்துவது மிக முக்கியமானது.

### மாகாண எல்லை நிர்ணய கமிஷன்.

ஆதலால் முதலாவதாக இந்திய சர்க்கார் மாகாணங்களைப் புதிய முறையில் அமைப்பதற்கு தகுதியான தலைவரடங்கிய மாகாண எல்லை நிர்ணய கமிஷன் ஒன்று ஏற்படுத்த வேண்டும். அவர்கள் அது சம்பந்தமாக எவ்வளவு அநுகூலமிருக்கிறதென்பதைப்பற்றி முயற்சி செய்து ஒரு திட்டத்தை ஏற்படுத்தவேண்டும்.

பின்னர் மாகாண சர்க்காரின் அரசியல் திட்ட மாற்றத்தைக் குறித்து கமிஷனர்கள் தெரிவிப்பதாவது:—

மாகாண சர்க்காரின் அரசியல் திட்டத்தைக் குறித்து எங்களிடம் சாட்சி சொன்ன ஒவ்வொருவரும் எங்களுக்கு சமர்ப்பித்த ஒவ்வொரு தஸ்தாவேஜும் திட்டத்தில் மாற்றம் வேண்டுமென்றும் தெரிவித்திருக்கின்றனர், முடிமான் அறிக்கை வெளிவந்தது முதல் அரசியல் திட்டம் மீண்டும் திருத்தியமைக்கப்பட வேண்டுமென்ற அவா வளர்ந்து அதிகரித்துவந்திருக்கிறது. சர்க்கார் வேலையின் பிரயோஜனத்தை பொதுப்பிரதிநிதிகள் மதிக்காத நிலைமையில் இருக்கின்றன. ஆதலால் இந்திய பொது ஜனத் தலைவர்கள் அரசியல் திட்டத்தில் மாறுதல் வேண்டுவது இயற்கையே. இவ்வபிப்பிராயத்திற்கு ஒவ்வொருமாகாண சர்க்காரிலும் ஆதாரமிருக்கிறது. அது சம்பந்தமாக என்ன செய்யவேண்டுமென்பதைக் குறித்து இந்த எட்டு மாகாண சர்க்கார்களும் ஒன்றுக்கொன்று ஒற்றுமையான அபிப்பிராயத் தெரிவிக்கவில்லை. ஒவ்வொரு சர்க்காரும் தங்கள் சொந்த பிரச்சினைகளைக் குறித்துச் சொல்லி அவைகளைத் தீர்த்து வைப்பதற்கு சில ஆலோசனைகளும் கூறுகின்றது. ஆனால் எல்லா மாகாண சர்க்கார்களும் மாறுதல் ஏற்படவேண்டுமென்ற விஷயத்தில் ஒரே அபிப்பிராயமுடையவர்களாக இருக்கிறார்கள்.

பின்னர் கமிஷனர் அறிக்கையில் அது சம்பந்தமாக மாகாணசர்க்கார்கள் மாகாண சைமன் கமிட்டிகள், மத்தியக் கமிட்டி இவைகளின் அபிப்பிராயங்களையும், மற்ற உத்தியோகப் பற்றற்றோர் சாட்சியங்களையும் பற்றிக் குறிப்பிட்டு பின்வருமாறு தெரிவிக்கின்றனர்:— இத்தனைவித அபிப்பிராயங்களை நாங்கள் பரிசீலனை செய்த பின்னர் கீழ்க்கண்ட முடிவுக்கு வந்திருக்கிறோம். அதாவது எல்லா மாகாணங்களுக்கும் பொருத்தமான ஒரேவிதமான அமைப்புடன் கூடிய அரசியல் திட்டம் இருக்க வேண்டும். ஆனால் ஒவ்வொரு சர்க்காரின் தனிப்பட்ட பிரச்சினைகளை சரிப்படுத்திக் கொள்வதற்கும் அத்திட்டத்தில் இடமிருக்கவேண்டும். மாகாண அரசியல் திட்டம், சட்டப்படி ஒரு முறையிலிருந்து மற்றொரு முறைக்குத் தாவாது தன்படி வளர்ந்து அபிவிருத்தியடையக்கூடியதாக இருக்கவேண்டும். பொறுப்பு சர்க்கார் நிர்வாகம், அதன் வேலைகள் இவைகளைக் குறித்து இதற்குமுன் அநுபவமில்லாத சிலருக்கு இரட்டை ஆட்சிமுறை அவைகளில் அநுபவத்தை யுண்டாக்கியிருக்கிறது.

ஆனால் அம்முறை இடைஞ்சலாகவே இருந்திருக்கிறது. சர்க்கார் மாற்றப்படாத இலாகாக்களுக்கும் மந்திரிகளுக்கும் மத்தியில் அது இடையூறாக இருந்திருக்கிறது. அல்லது அவர்களை அதிகார வர்க்கத்தினர் ஆட்டிவைக்கும் பொம்மைகளுக்கு சமானமாக ஆக்கியிருக்கிறது. அம்முறை அமுலிலிருந்து வந்த கால முழுவதும்

(௬௩-ம் பக்கம் பார்க்க.)

(கூ-ம் பக்கத் தொடர்ச்சி)

எக்கருத்தை உத்தேசித்து அம்முறையை ஏற்படுத்தினர்களோ அதாவது பொறுப்பான ஆட்சி முறையை அபிவிருத்தி செய்யவேண்டுமென்ற கருத்துக்கு அது இடைஞ்சலாகவே இருந்தது. ஆதலால் மாகாண மந்திரி சபை கூட்டுப் பொறுப்புடையதாக இருக்கவேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். அதாவது மந்திரி சபையின் ஒவ்வொரு அங்கத்தினரும் மாகாண சர்க்காரின் கொள்கை முழுவதற்கும் ஜவாப்தாரியாக விருக்க தயாராக விருக்கவேண்டும். மாகாண நிர்வாக முழுதும் மாகாண மந்திரி சபையைப் பொறுத்து நிற்கும். அந்த மாகாண மந்திரிசபையின் அங்கத்தினர்களை கவர்னர் தெரிந்தெடுப்பார். ஒவ்வொரு மாகாணத்திலும் எல்லா இலாகாகளும் மாகாண சட்ட சபையோரால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை அங்கத்தினர்களாகிய மந்திரிகள் கையில் இருக்கவேண்டுமென்று நாங்கள் கூறவில்லை. ஆனால், அப்படிப்பட்ட மந்திரிகள் கையில் சில குறிப்பிட்ட இலாகாக்கள் செல்லலாகாதென்று சட்ட மூலமாக இலாகாக்களை பாகு படுத்தலாகாது. சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப்படாது ஒன்று அல்லது இரண்டு உத்தியோக அங்கத்தினர்களை மந்திரிகளாக நியமிப்பதைக் குறித்து கவர்னர் ஜெனரல் ஆலோசனையின் பேரிலும் அதிகாரத்தின் பேரிலும் கவர்னர் முடிவுசெய்துகொள்ள வேண்டியது. இது சம்பந்தமாக ஒரு மாகாணத்திற்கு மற்ற மாகாணம் வித்தியாச முடையதாக இருக்கலாமென்று நாங்கள் கருதுகிறோம். ஆனால், அவ்வித நிலைமை சட்ட சம்பந்தமான ஒரு நிபந்தனையால் ஏற்பட்டது.

மந்திரி சபை.

ஆனால் மந்திரிசபை அமைப்பில் கூட்டுப் பொறுப்பும் அமையவேண்டும். மந்திரிகள் தங்கள் நிலைமையைக் காத்துக்கொள்வதற்கும் ஒரு முகமாக ஒரு விஷயத்தை நிறைவேற்றுவதற்கும் இருவித மாறுதல்கள் ஏற்படவேண்டும்.

(க) அரசியல் அமைப்புத்திட்டத்தில் மந்திரிகள் சம்பளத்தை சட்டசபை ஓட்டுகள் மூலமாக குறைப்பதற்கு முடியாதபடி செய்யவேண்டும். அவர்கள் சம்பளத்தை சர்க்கார் சட்டத்தால் மட்டும் கூட்டவோ குறைக்கவோ முடியவேண்டும்.

(உ) நம்பிக்கை யில்லாத தீர்மானம் தனிப்பட்ட மந்திரிகள் மீதன்றி முடமந்திரி சபைமீது கொண்டுவரக்கூடிய முறையில் அரசியல் திட்டத்தை அமைக்கவேண்டும். மந்திரிகள் தாங்கள் மந்திரிகளாக இருக்கும் காலஅளவு ஸ்திரமாக இருக்கிறதென்றும் அக்காலத்திற்குள் தங்கள் கொள்கை பூர்த்தியாகி அதன் பலன் வெளியாகுமென்றும் ஒரு திடமான நம்பிக்கை யிருப்பதற்கு இடமிருக்க வேண்டும். இப்பொழுதுள்ள நிலைமையில் மந்திரிகள் தங்கள் நிலைமையைக் காத்துக்கொள்ள கக்ஷி அல்லது அக்கக்ஷியின் தற்காலிகமான ஆதரவைப் பெறவேண்டியிருக்கிறது. அதனால் நன்மைத முக்கியமான வேலையை நடத்திச் செல்லுவது மந்திரிகளுக்கு மிகவும் கஷ்டம்.

மூன்றுவதாக மந்திரி பதவி சம்பந்தமாக வகுப்புவாத சச்சரவு நேரிடாதபடி ஒரு வழி ஏற்படுத்தலாமா என்பதைப்பற்றி ஆலோசிப்பது சிலாக்கியமாகும். அதாவது மொத்தம் மந்திரிகளுக்குக் கொடுக்கும் சம்பளத் தொகைக்குள்ளாகவே பிரிட்டனில் உதவி மந்திரி என்று அழைக்கப்படுவதுபோல் சில உப மந்திரிகளை நியமிக்கலாம் என்பதைப் பற்றி ஆலோசனை செய்தால் அது பொருத்தமானதாகத் தெரியவில்லை.

சட்டசபைக்கு முழுப் பொறுப்பிருக்க வேண்டும். அது மிக பொறுப்புடையதாகவும் உண்மையான சட்டசபையாகவுமிருக்கும்.

சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப்படாத அங்கத்தினரை மந்திரியாக நியமிப்பது சம்பந்தமாகக் கூறும் பொழுது, அப்படிப்பட்டவர்கள், அதிக அனுபவமுடைய சர்க்கார் உத்தியோகஸ்தர்களாக இருக்கவேண்டும். ஆனால் சில சந்தர்ப்பங்களில் சட்டசபைக்கு சம்பந்தப்படாத உத்தியோகப் பற்றற்ற ஒரு இந்தியரையோ அல்லது பிரிட்டிஷாரையோ மந்திரியாக நியமிக்கவேண்டியிருக்கலாம். அப்படிப்பட்ட மந்திரி மற்ற மந்திரிகளை போலவே அதிகார முடைய வராக இருப்பாரேயன்றி மேற்பட்ட அதிகாரமுடையவராக இருக்கமாட்டார்.

கவர்னரது அளவுக்குமீறிய அதிகாரத்தைக்குறித்து கமிஷனர்கள் தெரிவிப்பதாவது:—

எல்லா இலாக்காக்களின் சம்பந்தமாக சர்க்கார் எப்பொழுதும் மந்திரி சபையின் ஆலோசனைக்குக் கட்டுப் பட்டிருக்க வேண்டுமென்று மாகாண சர்க்காராவது அல்லது மாகாணக் கமிட்டிகளாவது தெரிவிக்கவில்லை மத்தியக் கமிட்டியாரும் அவ்வித அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவில்லை. அவ்வித வழக்கத்தை இப்பொழுதுள்ள நிலைமையில் புகுத்துவது பாதகமானதென்றே நாங்கள் நிச்சயமாகக் கருதுகிறோம். கீழ்க்கண்ட காரணங்களால் கவர்னருக்கு நிர்வாக விஷயத்தில் மந்திரி சபையின் ஆலோசனையோடுகூட நேராகவும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள சட்ட சம்பந்தமான அதிகாரம் கொடுக்கவேண்டும்.

(க) அப்பொழுது தான் மாகாணத்தின் அமைதியையும், பாதுபாப்பையும் சரிவர நிர்வகிக்க முடியும்.

(உ) ஒரு வகுப்பார் மற்றொரு வகுப்பார் மீது துவேஷங்கொள்ளாதவாறு பார்த்துக் கொள்ளமுடியும்.

இவைகள் தவிர சில சட்ட அமைப்பு சம்பந்தமாக கவர்னருக்கு சில விசேஷ அதிகாரமிருக்க வேண்டும். இன்னும் மூன்று விஷயங்களில் கவர்னருக்கு விசேஷ அதிகாரம் இருக்கவேண்டும்.

(க) சர்க்கார் கடனைத் தீர்த்து வைக்கும் செலவுத் திட்டங்கள் சட்டசபை ஓட்டைப் பொறுத்திருக்காதபடி யிருக்கவேண்டும்.

(உ) இந்தியா மந்திரியிடமிருந்தோ அல்லது இந்திய சர்க்காரிடமிருந்தோ வரும் உத்தரவை நிறைவேற்றி வைப்பதில் கவர்னருக்கு விசேஷ அதிகாரமிருக்க வேண்டும்.

(க) சர்க்கார் உத்தியோக சம்பந்தமான கடமைகள், பிற்போக்குடைய அரசியல் திட்டமுள்ள பிரதேசங்களைப்பற்றிய பொறுப்பு, இவைகள் சம்பந்தமாக சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட கடமைகளை நிறைவேற்றி வைப்பதில் கவர்னருக்கு விசேஷ அதிகாரமிருக்கவேண்டும்.

மந்திரி சபைக் கூட்டம்.

அதன்பின் மந்திரிசபைக் கூட்ட முறையைக் குறித்து அறிக்கை தெரிவிப்பதாவது:—

பொதுவாக மந்திரி சபையின் ஒவ்வொரு கூட்டத்திற்கும் கவர்னர் தலைமை வகிப்பதே மேலானதென்று கருதப்படலாம். ஆனால் சாதாரணமாக அவரில்லாமலே மந்திரி சபையில் பெரும்பாலான வேலை நடைபெறவேண்டுமென்று நாம் எதிர்பார்க்க வேண்டும். இது விஷயத்தைக் குறித்து கவர்னரே முடிவுசெய்து கொள்ளும்படி நாங்கள் விட்டுவிட்டோம்.

மந்திரிசபைக்கு ஒருசிவில் உத்தியோகஸ்தர் காரியதரிசியாக இருக்கவேண்டும். அவர் ரிக்கார்டுகளை சரிவர பாதுகாத்து வருவதோடல்லாமல் அவர் கவர்னரது நேரான பார்வையிலிருந்து வரவேண்டும். அப்படியானால்தான் கவர்னர் ஒரு மந்திரி சபைக் கூட்டத்திற்கு வந்தாலும் வாராது போனாலும் மந்திரி சபைக் கூட்ட நடவடிக்கையைக் குறித்து உண்மையானதும், பாரபட்ச மற்றதுமான ரிக்கார்டுகள் ஏற்படுத்த முடியும்.

சர்க்கார் கொள்கையைப் பற்றிய பெரிய விஷயங்கள் ஓட்டுகளைப்பொறுத் திருக்கலாகாது. புதிய அரசியல் சீர்திருத்தச் சட்டத்தில் இப்பொழுதுள்ள இந்திய சர்க்கார் சட்டம் ௫௦ வது பிரிவின் ௩ வது விதியைப்போல் ஓர் விதி இருக்கவேண்டும். வேறுபாடான விஷயங்களில் பெரும்பாலோர் அபிப்பிராயமே வெற்றி பெறும் என்பதற்காகவன்றி சிறுபான்மையோரும் அவ்விதக் கொள்கையை ஒப்புக்கொண்டு அதன் பொறுப்பை வகிக்கவேண்டுமென்பதற்காக அவ்விதம் செய்யவேண்டியிருக்கிறது. மந்திரி சபையின் தீர்மானத்தை மீறி செய்யவேண்டிய சில விஷயங்களில் மட்டும் சட்ட சம்பந்தமான தனது அதிகாரத்தைக் கொண்டு கவர்னர் கிராண்டுகள் சம்பந்தமாக தோல்வியுற்ற தீர்மானத்தை தானே நேராக நிறைவேற்றலாம். நிராகரிக்கப்பட்ட சில சட்டங்களை தனது விசேஷ அதிகாரத்தால் கைசாத்திட்டு நிறைவேற்றலாம் ஆனால் இவ்வித குறிப்பிட்ட சில விஷயங்களைத் தவிர மற்றப்படி அவைகள் சம்பந்தமாக சர்க்கார் விரும்பிய கிராண்டுகளை சட்ட சபை மூலமாக நிறைவேறும்படி செய்வது மந்திரிசபையின் கடமையாகும், ஒவ்வொரு விஷயத்திற்கும் கவர்னர் குறுக்கிட வேண்டிய அவசியம் நேரிடாத காலம் வந்தால் தான் மாகாணத்தில் சுயஆட்சி நிறுவ முடியும். இத்திட்ட சம்பந்தமாக நாங்கள் கவலைப் படுவது யாதெனில், இன்னும் நீண்ட காலத்திற்கு இத்திட்டத்தை நிறைவேற்றி வைப்பதற்கு சாமர்த்தியம், நியாயம், அனுதாபம், தீரமுடைய கவர்னர்கள் அமைய வேண்டும்.

சிறுபான்மை வகுப்பினரும் மந்திரி சபையும்.

சிறுபான்மை வகுப்பினரை மந்திரி சபையில் சேர்த்துக்கொள்ள பிரத்தியேக விதிகள் ஏற்படுத்த வேண்டுமென்பது முடியாத காரியம். அது சம்பந்தமாக சிறுபான்மையோர் பாதுகாப்பிற்கு மற்ற வழிகளை ஏற்படுத்தவேண்டும்.

சில மாகாணங்களில் முக்கியமான சிறுபான்மை வகுப்பினரைச் சேர்ந்த மந்திரிகளினின்று உறுதியான மந்திரி சபையேற்படுத்துவது முடியாததாக இருக்கின்றது. மற்ற மகாணங்களிலும் அவ்வித வழியை பின்பற்றுவதற்கு முயற்சி செய்வார்கள். ஆகவே சாதாரணமாக ஒரு பிரதம மந்திரியிருப்பார். மற்ற மந்திரிகளை நியமிப்பதற்கு முன் கவர்னர் அப் பிரதம மந்திரியைக் கலந்துகொள்வார். ஆனால் அவ்விதம் நியமனம் செய்யவேண்டுமென்று அரசியல் திட்டத்தில் விதியிருக்கவேண்டிய அவசியமில்லை. ஏனெனில் சில சந்தர்ப்பங்களில் பல வகுப்பிலிருந்தும் மந்திரி சபை அமையப்பெறுவதால் அதிகக் கஷ்டம் நேரிடாது மந்திரிசபை மாறும்போது உத்தியோகப் பற்றுடைய மந்திரியின் நிலைமையைக்குறித்து சில கஷ்டங்கள் ஏற்படுமென்பது வாஸ்தவமே. பொதுவாகப்பேசுமிடத்து இவ்விதமந்திரி தொடர்ச்சியாக பதவி ஏற்று வருவதற்கு ஆட்சேபனை இருக்காது. ஆனால் இவ்விதமுறை உரிய நலமென்பதற்கு ஏற்ற சந்தர்ப்பங்கள் ஏற்படலாம்.

போலீஸ்.

பின்னர் கமிஷனர்கள் சட்டம், அமைதி பிரச்சினையைக் குறித்து சாதகமாகவும் பாதகமாகவுமான விஷயங்களை எடுத்துக் காட்டுகின்றனர். கமிஷனர்கள் அதைக் குறித்துத் தெரிவிப்பதாவது:—

ஐ. சி. எஸ். ஐ. பி. எஸ். உத்தியோக முறைதான் இப்பொழுது நாட்டின் அமைதியையும் சட்ட ஒழுங்கையும் உறுதியுறச் செய்கின்றது. ஆனால் போலீஸ் இலாகா மாற்றப்பட்ட இலாகா மாற்றப்பட்ட இலாகா ஆகாவிடில் மீண்டும் இரட்டை ஆட்சி முறை இருப்பதாகவே கருதப்படும்.

(கரு-ம் பக்கம் பார்க்க)







(கச-ம் பக்கத் தொடர்ச்சி)

மாறுதல் இன்றி மாகாணத்தில் பொறுப்பாட்சி நடைபெற முடியாது. இவ்விலாகாவை நிர்வகிக்கத் திறமை யில்லையேல் மற்றெதையும் தங்களால் நிர்வகிக்கத் திறமையிடையாதென்று எங்கள் முன் ஒரு இந்திய மந்திரி சாட்சிகூறினர். சட்டமும் ஒழுங்கும்தான் ஒவ்வொரு இந்தியரின் முதல் உரிமையாகும்.

கமிஷனர்கள் உத்தியோகப்பற்றில்லாத மந்திரிகளின் தொகையை சட்ட சம்பந்தமாக இவ்வளவென்று நிச்சயிக்கலாகாதென்று அபிப்பிராயப் படுகிறார்கள்.

மாகாண சட்டசபை.

பின்னர் அறிக்கை மாகாண சட்டசபையின் அமைப்பைக் குறித்துத் தெரிவிப்பதாவது:—

மாகாண சட்டசபை ௫ வருஷங்களாக நீடிப்பதுவே சரியான முறையாகும்.

ஒரு பெரிய மாகாணத்திலுள்ள அங்கத்தினர் தொகையை ௨௦௦ லிருந்து ௨௫௦ ஆக அதிகரித்தால் அது தற்காலத்திற்குப் போதுமானதாகும்.

வகுப்புவாரி பிரதிநிதித்வம்.

பின்னர் தனித் தொகுதியைக் குறித்து அறிக்கை தெரிவிப்பதாவது:—

முஸ்லீம்கள் ஒருவகுப்பார் என்ற முறையில் அவர்கள் பிரதிநிதித்துவத்தை விடத் தயாராக இல்லை. அவ்வகுப்பாரின் சம்மதமின்றி அம் முறையை ஒழிப்பதானது பாதுகாப்புக்கு பங்கம் நேரிடுவதோடுகூட அதைச் சார்ந்துள்ள அவ் வகுப்பாரின் நலனுக்கும் பாதக மேற்படும்.

இப்பொழுது வகுப்புவாரிப் பிரதிநிதித்வத்தைப்பற்றி யாதொரு புதிய ஒப்பந்தமுமில்லாதபடியால் வகுப்புவாரி பிரதிநிதித்துவ முறை இன்னும் நடைபெறவேண்டும். ஸ்தானங்களை ஒதுக்கி வைப்பதால் மட்டும் முஸ்லீம்கள் சட்டசபையில் சரியான பாதுகாப்புப் பெறுவார்கள் என்று சொல்லமுடியாது.

சிறுபான்மை வகுப்பைச் சேர்ந்த வாக்காளர்கள் முதலாவதாகத் தகுந்த அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அவர்கள் முடிவாகக் கூட்டுத் தொகுதியின் ஓட்டு மூலமாக அந்த வகுப்பாருக்கென ஒதுக்கி வைக்கப்பட்ட ஸ்தானத்தில் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். இது சம்பந்தமாக தனியாக ஓர் திட்டத்தை கமிஷனர்கள் பிரசுரித் திருக்கின்றனர்.

பார்ப்பன ரல்லாதார்.

சென்னையிலுள்ள பார்ப்பனரல்லாதார் சம்பந்தமாக அவர்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கவேண்டிய அவசியமில்லை. ஆனால் பம்பாயிலுள்ள மராட்டியர்கள் சம்பந்தமான ஒதுக்கப்பட்ட ஸ்தாபனங்களை எடுப்பதற்கு இன்னும் காலம் வரவில்லை.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்பந்தமாக அவர்களை சமூக நிலைமையிலும், பொருளாதார நிலைமையிலும் அபிவிருத்தி செய்ய உதவி நடைபெற்று வருவதால், அவர்களுக்கு தனித் தொகுதி வேண்டியதில்லை. எல்லா மாகாணங்களிலும் முஸ்லீம்களல்லாத தொகுதிகளில் அவர்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்ட சில ஸ்தானங்களிருக்க வேண்டும். அவ்வித ஸ்தானங்களின் வீதாசாரம், மாகாணத்திலுள்ள வாக்காளர் தொகுதியின் மொத்த ஜனத்தொகையில் தாழ்ந்த வகுப்பினர் ஜனத்தொகையின் வீதாசாரத்தில் முக்கால் பங்குடையதாக விருக்கவேண்டும். தாழ்ந்த வகுப்பினருக்காக அபேட்சகராக நிற்கிறவர்கள் முதலாவதாக அவ்விதம் தேர்தலுக்கு நிற்க கவர்னரது அதிகாரத்தைப் பெறவேண்டும். சரியான அபேட்சகர் அகப்படாவிடில் கவர்னர் தாழ்த்தப்பட்ட வகுப்பினரல்லாத தகுதியுடைய ஒருவரை அவர் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக பாடுபடக்கூடியவராக இருந்தால், அவர்கள் தொகுதியில் தேர்தலுக்கு நிற்கும்படி அதிகாரம் கொடுக்கலாம். ஒதுக்கி வைக்கப்பட்ட ஸ்தானங்களில் பாதி ஸ்தானங்களுக்கு அவசியமானால் கவர்னரே தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகளை நியமிப்பதற்கு கவர்னருக்குப் பத்து வருஷ அதிகாரம் இருக்க வேண்டும். சரிவர தேர்தல் திட்டத்தை நடத்தமுடியாது. மேல் வகுப்பார் கவிழ்த்து விடக்கூடிய நிலைமையினின்றும் அவர்களை பாதுகாப்பதற்காகவே இவ்வித முறை அனுஷ்டிக்கவேண்டும்.

ஐரோப்பியர் தனித் தொகுதி மூலமாகவே பிரதிநிதித்துவம் பெறவேண்டும். இதுவரை அவர்கள் அடைந்துள்ள உயர் நிலையைப் பாதுகாக்க அவ்விதமுறை இருக்கவேண்டியதவசியம்.

முஸ்லீம்கள்.

முஸ்லீம்களுக்கு ௩ மாகாணங்களில் இப்பொழுதுள்ள ஸ்தானங்கள் அதிகமானவை. அதேசமயத்தில் ஹிந்துக்கள் சீக்கியர்கள் எதிர்ப்பில் வங்காளத்திலும் பாஞ்சாலத்திலும் வாக்காளர் தொகுதியால் மாற்ற முடியாத பெரும்பான்மை ஸ்தானங்களை அனுபவிப்பது ஏற்றதல்ல. முஸ்லீம்கள் வங்காளத்தில்ஒப்பந்தமூலமாக தனித்தொகுதிக்குப் பதில் கூட்டுத்தொகுதி மூலமாக ஒவ்வொரு வகுப்பாரும் பிரதிநிதித்துவம் பெற விரும்பினால், முஸ்லீம்கள் சிறு பான்மையாகவுள்ள மற்ற ௩ மாகாணங்களில், முஸ்லீம்கள் அனுபவித்துவரும் அதிக ஸ்தானங்களில் நாங்கள் தலையிடவில்லை. அதேபோல் பாஞ்சாலத்தில் முஸ்லீம்கள் சீக்கியர் இந்துக்கள் இவர்கள் கூட்டுத்தொகுதி மூலமாக தேர்தலுக்கு நிற்க முயன்றால் பின்னர் நாங்கள் மற்ற ௩ மாகாணங்களில் தனித்தொகுதி மூலமாக முஸ்லீம்கள் பெற விரும்பும் ஸ்தானங்களை அனுமதிக்க தயாராக இருக்கிறோம்.

பெண்கள் ஓட்டுரிமை.

பெண்கள் சட்டசபை அங்கத்தினர்களாக வரவேண்டும். சட்டசபைகள் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினரையுடையதாக இருக்க வேண்டுமென்று கவர்னர் கருதினால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெண் அங்கத்தினர்களின் தொகையை அதிகரிக்க கவர்னருக்கு அதிகாரமிருக்க வேண்டும். அத்தகையநியமனம் மொத்த ஸ்தானங்களில் ௧௦௦-க்கு ௫ மடங்கிற்குக் குறையாமலும் ௧௦ மடங்கிற்கு அதிகரிக்காலுமிருக்க வேண்டும்.

கவர்னர் வேண்டுமென்று விரும்பினால் பெண்களும் தொழிலாளர்களும் அதிகமான பிரதிநிதித்வம் பெறுவதற்கு கவர்னருக்கு அதிகாரம் ஒதுக்கிவைக்கப்படவேண்டும்.

சட்டசபை அதிகாரம்.

பெரும்பாலும் இப்பொழுது மாகாண சட்டசபை இதற்குமுன் உள்ளதுபோலவே இருக்கவேண்டும்.

ஓட்டுரிமையை அதிகரித்தல்.

பிரதிநிதித்துவ ஆட்சிமுறைத் திட்டத்திற்கு இப்பொழுதுள்ள ஓட்டுரிமை முறை போதாததாக இருக்கிறது.

ஆகவே இப்பொழுது ஒரு புதிய ஓட்டுரிமை கமிட்டி ஒன்று, அதிக அனுபவமும் சுதந்திரமுமுள்ள ஒருசேர்மேன் தலைமையில் நியமிக்கவேண்டும். அக்கமிட்டி மொத்த ஜனத்தொகையில் ௧௦௦-க்கு ௧௦ மடங்கு ஜனத்தொகை ஓட்டுரிமைபெறும் வழியைக் குறித்து ஒரு திட்டத்தை ஏற்படுத்த வேண்டும். மொத்த ஜனத்தொகையில் ௧௦௦-க்கு ௨௦ பேருள்ள தேர்தல் தொகுதி ஏற்படுத்தவேண்டும். எழுதப்படிக்கத் தெரிந்தவர்களுக்கு விசேஷ உரிமை அளிக்க வேண்டும். பெண்கள் ஓட்டுரிமை சம்பந்தமாக அவர்களுக்கு இப்பொழுதுள்ள உரிமையுடன் இன்னும் இரண்டு உரிமைகளை சேர்த்துக்கொள்ளலாம். (க) வோட்டுக்கு சொத்துரிமையுள்ள புருஷனின் உகூ வயதுக்கு மேற்பட்ட மனைவிக்கு ஓட்டுரிமை அளிக்கவேண்டும்.

(உ) அவ்வித சொத்துரிமையுடன் கூடிய கணவன் இறந்தபோய் அவன் மனைவி உகூ வயதுக்கு மேற்பட்டவராக இருந்தால் அவ்விதவைக்கும் ஓட்டுரிமை அளிக்கவேண்டும்.

௧௦ வருஷங்களுக்குப் பின் இரண்டாவதாக ஓர் ஓட்டுரிமைக் கமிட்டி நியமித்து ௧௦௦-க்கு ௨௦ வீதமுள்ள ஜனத்தொகையின் ஓட்டுரிமையில் அபிவிருத்தியைக் குறித்து ஆராயவேண்டும்.

மாகாண அரசாங்க சபை.

மாகாண அரசாங்க சபைகள் நியமிக்க வேண்டுமென சிபார்சு செய்தவர்களின் ஜாபிதாவை மட்டும் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறது.

முடிவுரை.

முடிவுரையில் கமிஷனர்கள் கூறுவதாவது:—

இந்திய சகோதர பிரஜைகள் எங்கள் அறிக்கை முழுவதையும் வாசித்துப்பார்த்த பின்பு நாங்கள் உண்மையான அநுதாபத்தைக்கொண்டே சிபார்சுகள் செய்திருக்கின்றோம் என்பதை தெரிந்துகொள்வர் என்று நம்புகிறோம். எங்கள் அறிக்கை இந்தியாவிற்கு அமைதியான முறையில் திட்டங்கள் வகுக்க யோசனைகளும் சமாசாரங்களும் கொடுக்கும் என்னும் நம்பிக்கையுடன் நாங்கள் அதை சமர்ப்பணம் செய்கின்றோம்.

## ஓர் பொதுக் கூட்டம்.

(௩-ம் பக்கம் தொடர்ச்சி.)

கேட்க வேண்டும். இது நமது கடமை. இதை நாம் செய்யாவிடின், இந்தியாவின் நன்மைக்கு நாம் கோடாரிக்காம்பாக ஆகிறோம்.

முடிவில், கவர்ன்மெண்டாருக்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். இந்த சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பித்து நடத்துகிறவர் சிலரே. வேறு வேலை இல்லாதவர்களும், வீண்புகழ் அடைய விரும்பியவர்களும், வயதாகாத வாலிபர்களுமே இந்த இயக்கத்தில் கலந்திருக்கிறார்கள். பெரும்பான்மையோர் கவர்ன்மெண்டாரிடம் நம்பிக்கையுள்ளவர்களாகவே இருந்துகொண்டு, அவர்களுடன் ஒத்துழைக்கத்தயாராயிருக்கின்றார்கள். மேலும் பெரிய சீர்திருத்தங்கள் வரும் தருவாயில், எந்த தேசங்களிலும், ராஜாங்கத்துக்கு விரோதமான இயக்கம சிற்சில பாகத்தில் காணப்பட்டே வந்திருக்கிறது. ஆனதுபற்றி, இந்த சட்டமறுப்பு இயக்கத்தை ஜாஸ்தியாகப் பாராட்டாது, இந்தியாவின் நன்மையையே பாராட்டி, கவர்ன்மெண்டாரின் ஆரம்பக்கொள்கையை கைவிடாது, இந்தியாவில் கூடியசீக்கிரத்தில் குடியேற்றப் பொறுப்பாட்சியை ஸ்தாபிக்கவேண்டிய ஏற்பாடுகளை மிக்க ஊக்கத்துடன் செய்யுமாறு வேண்டிக்கொண்டு இந்த சற்று நீண்ட முன்னுரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

இப்பிரசங்கம் முடிவுற்றதும் செட்டி நாட்டரசர் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியாரவர்கள் எழுந்து 'நமது தேசத்தில் பலரால் தற்போது கையாளப்பட்டு வருகிற சட்டமறுப்பியக்கமானது, தேசத்தின் க்ஷேமத்திற்குக் கேட்டைவிளைவிக்கத்தக்கதாகையால், இந்த சபையானது அந்த இயக்கத்தை தீவிரமாய்க் கண்டிக்கிறது என்ற தீர்மானத்தை பிரேரேபித்து அடியில் வருமாறு ஆங்கிலத்தில் பேசினர்.

தலைவரவர்களே! நண்பர்களே!

இக்கூட்டம் இன்று கூட்டப்பட்டிருப்பதின் நோக்கம் எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்திருக்கலாம். அக்கூட்டத்தில் எனக்கும் இடங்கிடைத்ததைப்பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகின்றேன். என்னிடம் தற்போது இந்தியாவில் தலைகாட்டிநிற்கும் இயக்கத்தைக் கண்டிக்கிற ஓர் தீர்மானத்தை பிரேரேபிக்குமாறு கேட்டிருக்கின்றார்கள். நான் அவ்வியக்கத்தைக் கண்டிக்கத் தகுந்த காரணமெதையும் காணகிலேன். நம் தாய்நாடானது இப்போதடைந்திருக்கின்ற நிலையை பண்டைகாலத்து நிலையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இரண்டிற்கும் மிகப்பெரிய வித்தியாசங்கள் உண்டென்பதைக்காணலாம். பண்டைக்காலத்தில் பல ஒழுங்கான சட்டங்கள் இருந்தன. எனவே வாழ்க்கை ஒழுங்குபெற நடந்துவந்தது. ஆனால் தற்போது நமது நாடு தன் உரிமைக்காகப் போராடுகின்றது. நம்மையாளும் ஆங்கிலேயர்கள் ௧௦-வருஷத்திற்கொருமுறையாக சிறிது சிறிதாய் நமக்குச் சுதந்திரத்தை வழங்க வாக்களித்துள்ளார்கள்; கொஞ்சம் தந்துமிருக்கின்றார்கள். அவைகளைக்கொண்டு நாம் திருப்திப்படவேண்டும். இன்னும் தருவார்கள் என்று எதிர்பார்க்கலாம். அப்படி எதிர்பார்ப்பதில் பிரயோசனமில்லையென்று கருதினல் அச்சு உரிமைகளுக்காகப் போராடுவதில் பாதகமில்லை. ஆனால் நம் போராட்டம் சட்டத்திட்டங்கட்குக் கட்டுப்பட்டதாகவிருக்கவேண்டும்; சட்டத்திலிருந்து நாம எட்டுணையும் நழுவலாகாது. சமாதானம், ஒழுங்கு, முன்னேற்றம் இவைகளே நமது வழிகாட்டியாக இருத்தலவேண்டும். நன்கு கையாடப்படுகின்ற சட்டத்திற்கு கீழ்ப்படிகின்ற ஒழுக்கமே மக்கள் அனுதாபத்தை வற்றுக் கொள்ளும் வன்மையுடைத்து. நாமெவ்வழியாலும் சட்டங்களை விட்டுப் பிறழலாகாது. இந்தச் செட்டிநாடு சட்டத்தைவிட்டு மாறுமென்று நானெண்ணவில்லை, (இந்த சமயத்தில் ஸ்தலம் ஆங்கிலபாடசாலைத் தலைமை யாசிரியராகிய திரு வெங்கிடராமய்யர் கேளுங்கள் கேளுங்கள் என்று கூவினர்.) கெட்டசிந்தனை எப்போதும் கெடுதியையே விளைவிக்கும்.

நம் கெட்டகாலத்தின் பயனாகவே தற்போதிய இச்சட்டமறுப்பியக்கம் தோன்றியிருக்கின்றது. அரசப்பிரதிநிதி இர்வின் பிரபு மிகுந்த நல்லகுணம் வாய்ந்தவராம். அப்படிப்பட்டவருடைய ஆட்சியில் இவ்வியக்கம் எழும்பியது கெட்டகாலத்தின் பயனே என்று சொல்லுகிறேன். அவர் நம் நாட்டிற்கு எத்தனையோ நன்மைகளைச் செய்திருக்கின்றார். இந்த சட்டமறுப்பியக்கம் நம் நாட்டுச் சிறுவர்களிடையே பிரசாரம் செய்யப்படுகின்றது எதுவால் அது அளவிலா தொல்லையை விளைவிக்கின்றது. இந்த இயக்கம் கெடுதியைப்பயப்பதே என்று கூற நான் எட்டுணையும் சந்தேகிக்கவில்லை. நீங்களும் அவ்வண்ணமே எண்ணுவீர்களென்று நினைக்கிறேன். இதைவிட அதிகமாக நானொன்றையும் சொல்ல நினைக்கவில்லை. கடைசியாக நம் தலைவர் (திரு. ஆ. வி. பழ. சித) அழிவைத் தரும் சட்டமறுப்பியக்கத்தைக் கண்டிக்கும்பொருட்டு ஓர் கூட்டம் கூட்டியிருப்பதற்காக என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு மேற்படித் தீர்மானத்தை பிரேரேபிக்கின்றேன்.

இதனை ஆமோதித்த திரு. என். எஸ். வெங்கிட்டராமய்யர், (மீனாட்சி சுந்தரேசுவரர் ஆங்கிலப் பாடசாலைத் தலைமை ஆசிரியர்) பேசியதாவது:—

அன்பர்களே!

இந்தக் கூட்டத்தில் நான் கலந்துகொள்ளுமாறு இடம் பெற்றமைக்காகப் பெரிதும் மகிழ்ச்சியடைகின்றேன். எனக்கு ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரவர்கள் பிரேரேபித்த தீர்மானத்தை ஆமோதிப்பதில் அளவிலா சந்தோஷமுண்டு.

ஆங்கில ஆட்சி நம் நாட்டிலேற்பட்டு ௧௫௦ வருஷங்கள் தானுகின்றன. அதற்குள் எண்ணிறந்த நன்மைகளைச் செய்துவிட்டார்கள். அந்த நன்மைகளிலெல்லாம் மிக முக்கியமானது ஆங்கிலக் கல்வியாம். அவர்கள் பல பாஷைகளிலுள்ள கல்வி ஞானத்தைத் திரட்டி இங்கிலீஷ் வழியாக நமக்கு நல்குகின்றார்கள். ஆங்கில சாகித்தியம், வைத்தியம், பூமி சாஸ்திரம், வான சாஸ்திரம், முதலியன மிகச்சிறந்தவைகளாம். அவற்றை நமக்கு அளித்துள்ளார்கள். இக் கல்வியே நம்மைச் சுதந்திரப் பிரியர்களாக மாற்றியிருக்கின்றது. இந்தியாவில் சுயேச்சையைப் போதிப்பவர்கள் ஆங்கிலேயர்கள்தானென்று துணிந்து சொல்லுவேன். ரிப்பன் பிரபு, செப்ஸ்போர்ட் பிரபு, முதலிய பலர் நமக்குச் சட்டமூலமும சுயேச்சையைத் தந்திருக்கின்றார்கள். இன்னும் தருவார்கள் என்று எதிர்பார்க்கலாம். இரண்டு வருடங்கட்கு முன்பு அனுப்பப்பட்ட சைமன் கமிஷனும் அந்நோக்கத்துடனேயே அனுப்பப்பட்டது. சைமன் கமிஷன் இந்தியாவிற்கு வந்ததும் சிலர் அதனை வெறுப்பதாகக் கூறினார்கள். காரணம் என்னவென்று வினவியபோது எங்கள் பிரதிநிதிகள் கமிஷனிலில்லையென்று கூறினார்கள். ஆகவே ஸென்ட்ரல் கமிட்டி என்று ஒன்றை ஏற்படுத்தி அதில் இந்திய அங்கத்தினர்கட்கு இடமளித்தும் திருப்திப்படாமல் இந்தியாவின் விஷயங்களை ஆலோசிப்பதற்காக ஒரு வட்டமேஜை மகாநாடு கூட்டவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். நற்சிந்தைவாய்ந்தவர்களாகிய ஆங்கிலேயர்கள் அதற்குமுடன்பட்டார்கள்; அந்தத் தருணத்தில் காங்கிரஸ்காரர்கள் நாங்கள் போகமாட்டோமென்று மொழிகின்றார்கள். அரசப்பிரதிநிதி இர்வின் பிரபு மிக நல்லவராம். இந்தியாவிற்கு நன்மை செய்யவேண்டுமென்று எண்ணுகின்ற ஓர் மனிதருண்டென்றால் அவர் லார்டு இர்வினே என்று தெளிந்து கூறுவேன். அவரை ஒழித்தால் அடுத்தபடியாக நிற்பவர் பென் பிரபுவாம். இவ்விருவருக்கும் இந்தியாவிற்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டுமென்ற நல்லெண்ணம் சாலவுமிருக்கின்றது. ஆகவே வட்டமேஜை மகாநாட்டிற்கு ஆகவேண்டிய காரியங்களை மிக மும்முரமாகச் செய்து வருகின்றார்கள். அப்படி இருக்கும் தருணத்திலேயே சட்டமறுப்பு, வரிமறுப்பு, உப்புப்போராட்டம் இவைகள் தொடங்கப்பட்டிருக்கின்றன. இவைகளையொட்டி சத்தியாக்கிரகம், சிறைவாசம், கள்ளுக்கடைமறியல் இவைகள் தோன்றியிருக்கின்றன. இவைகள் கினைத்தணையும் நன்மைபயவாவென்பது வெளிப்படை; ஆராய்ந்துபார்க்கின் நமக்கு உதவிபுரியவேண்டுமென்றிருந்த பல அன்பர்கள் கோபமூட்டப்பட்டிருக்கின்றார்கள்.

சட்டமறுப்பியக்கம் மிக மிகத்துன்பம் தருவதாகும். இந்த மடையை ஒருபோதும் திறக்கலாகாது. ஒரு தடவைத் திறந்துவிட்டால் பின்னர் அடைப்பதென்பது இயலாதகாரியமாகும். எனவே ஆதியிலேயே அதனை அடைத்துவிட நாம் முயற்சிக்கவேண்டும். நம் இந்தியாவைப் போன்ற ஓர் பெரிய நாட்டில், தம்மையாளும் திறமையில்லாத ஒரு தேயத்தில் சட்டமறுப்பியக்கத்தைத் தலையெடுக்கவிடுவதென்றால் எப்போதும் சண்டை, அமளி, கலவரம் இவைகளே மூடியிருக்கும். சுயராஜ்யம் வந்தால் நாம் எல்லையில்லாது கஷ்டப்படப்போகிறோம். எனவே நான் இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கின்றேன்.

இப்பிரசங்கம் முடிந்ததும் தலைவர் அங்கு விஜயம்செய்திருந்தவர்களிடம் சம்மதைக் கேட்காமலே அது நிறைவேறியதாக பாவனைசெய்து கொண்டார்.

அப்பால் ராவ் பகதூர் ராமநாதன் செட்டியாரவர்கள் வட்டமேஜை மகாநாட்டிற்கு ராஜா சர் அண்ணாமலைச்செட்டியாரை ஓர் பிரதிநிதியாக அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்வதாக ஓர் தீர்மானத்தைப் பிரேரேபித்தார். அதனை கனம் நாராயணன் செட்டியாரும் திரு. ஆ. வி. லெ. அருணசலம் செட்டியாரும் ஆமோதித்தனர். திரு ஆ. வி. லெ. அருணசலம் செட்டியார் பேசியதாவது:—

இந்தத்தீர்மானத்தை ஆமோதிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததற்கப் பெரிதும்சந்தோஷமடைகின்றேன் இத்தீர்மானத்தின் கருத்து சமீபத்தில் கூடப்போகும் மகாநாட்டிற்கு ராஜா சர் அவர்களை பிரதிநிதியாக அனுப்பவேண்டுமென்பதாகும். நாம் சுயராஜ்யத்தை நியாயமான முறையில் வாதாடிப் பெற்றுக்கொள்ளவேண்டுமேயன்றி சட்டமறுப்பினுல் அடைந்துகொள்ளமுடியாது. நாம் தகுந்த பிரதிநிதிகளையனுப்பி இங்கிலாந்தில் போய் போராடவேண்டும். இப்போது நமக்குக் கிடைக்கப்போகின்ற வட்டமேஜை மகாநாட்டை ஓர் பெரும் பாக்கியமாய் எண்ணி அதனை உபயோகப்படுத்திக் கொள்ளவில்லையென்றால் நாம் பெரும் தவறிழைத்தவராவோம். எந்தச்சட்டத்தையும் நாம் வருமுன் தடுக்கவேண்டும்; வந்தபின் அதற்குக் கீழ்படிந்து நடவாமல் எதிர்ப்பதென்றால் சிறிதும் பொருந்தாது.

இப்போது நடக்கின்ற சட்டமறுப்பியக்கத்தை அடியுடன் வெறுக்கின்றேன். அதுநம்மிளைஞர்களை கெட்டவழியில் செலுத்துகின்றது. ஆகவே அம்முறைகளை விட்டுவிட்டு ஒழுங்கான முறையில் போராடவேண்டும்.

ஆதலால் நாம் தகுதியுடைய பிரதிநிதிகளை வட்டமேஜை மகாநாட்டிற்கனுப்பி நம் குறைபாடுகளை எடுத்துக்கூறவேண்டும். அதற்குத் தகுதியுடையார் ராஜா ஸர் அண்ணாமலைச்செட்டியாரவர்களேயென்பதில்ஐயமில்லை அவர்களை மகாநாட்டிற்கனுப்புவதில் எனக்கு அதிகமானசந்தோஷமுண்டு. ஆகவே மேற்படித்தீர்மானத்தை மனப்பூர்வமாக ஆமோதிக்கிறேன். (இத்தீர்மானமும் ஜனங்களின் சம்மதம் கேள்க்கப்படாமல் நிறைவேறியதாகக் கொள்ளப்பட்டது) பின்னர் ௩-வது தீர்மானத்தை ஆமோதித்து திரு. ராமசாமி ஐயர் பேசியதாவது:—

நாம் குழந்தைபோலவும் அரசாங்கம் தாய்போலவுமிருக்கவேண்டும். தாய் எனென்ன சொல்லுகின்றாளோ அதற்குக் குழந்தை கீழ்ப்படிந்து நடக்கவேண்டுவது கடமையாகும். அவளை எதிர்த்துப்போராடுவது முறையாகாது. இந்த ஆங்கில ஆட்சிமிகவும் போற்றத்தகுந்ததாம். "பிரகிருத" இந்தியாவிலே ஆங்கிலேயர்கள் "பகு" குணங்களைச் செய்திருக்கின்றார்கள்.

அப்பால் தலைவர் கேட்டுக்கொண்டவாறு கலக்டர் பேசியதாவது:—

செட்டி நாட்டரசவர்களே! சகோதரர்களே!

எனக்கு இந்தக் கூட்டத்தில் பேசுவதற்கு ஓர் தருணம் கிடைத்ததற்காக உங்களுக்கு வந்தன மளிக்கிறேன். நானிந்த ஜில்லாவில் பலவருடங்கட்குப்பின் வந்து உங்களைக் காண்பது மிகுந்த சந்தோஷத்தைத் தருகின்றது.

எனக்குச் செட்டிநாட்டைப்பற்றிச் சந்தேகமில்லை. அது ஒருபோதும் உப்புச் சட்டத்தை மறுக்கவும் கள்ளிறக்கும் மரத்தை வெட்டிவீழ்த்தவும், மறியல் வேலை செய்யவும் முன்வராதென்பது தெரியும். சமீபத்தில் எங்கேனும் அவ்விதம் செய்தால நீங்கள் அவற்றை அடக்க முயற்சி செய்யவேண்டுமென்றே கேட்டுக்கொள்கின்றேன். இன்று இத்தீர்மானங்கள் மிகவும் செல்வாக்குள்ளவர்களால் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. எனவே அவை சாலவும் பலனளிக்குமென்பது வெள்ளிடைமலையாம்.

சமீபத்தில் நான் நளனுடைய கதையைப் படித்தேன். அதில் கலியானவன் எவ்விதம் ராஜனைப் பிடித்தானென்று சொல்லப்பட்டிருக்கிறதோ அஃதே போன்று தற்போது இந்தியாவை ஓர் கலி பிடித்திருக்கின்றது. ஒரு பாம்பானது நளனைக் கடித்து சுகத்தைக் கொடுத்ததாக வாசித்தேன். இக் கதை அறிவுடையோருக்கும் கடமையைச் சரியாய் உணர்ந்துகொள்ளாதவர்கட்கும் புத்தி போதிப்பதாகும்.

இந்தியாவிற்கு நன்மையை விரும்புகின்ற சைமன் யாதாஸ்து வந்துவிட்டது. அதில் இந்திய விஷயங்கள் அழகாக எழுதப்பட்டிருக்கின்றன. இந்த ரிப்போர்ட்டு முடிவானதன்று. அது வெறும் சிபார்சேயாகும்.

இன்றையத் தீர்மானத்தில் செட்டிநாட்டரசரை ஓர் பிரதிநிதியாக அனுப்பவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனை நான் போற்றுகின்றேன். வட்டமேஜை மகாநாட்டில் இந்தியாவின் தேவை என்னவென்பது பற்றி யோசிக்கப்பட்டு இந்தியாவில் சமாதானத்தை நிறுவுவார்களென்று நம்புகிறேன்.

இதன்பின் நன்றி கூறப்பட்டுக் கூட்டம் கலைந்தது.

—



## ரப்பர் விலையிறக்கத்தால் ஏற்படும் மலையா நாட்டு நிலை

மலாய் நாட்டின் பொருளாதார நிலைமை ரப்பர், ஈயம் ஆகிய இரு விளைபொருள்களின் நிலவரத்தைப் பொறுத்ததாயிருக்கின்றது. தற்சமயத்தில் இவ்விரு பொருள்களும் போட்டி போட்டுக்கொண்டு விலையில் இறங்கிக்கொண்டே வருகின்றன. ஒரு காலத்தில் சுமார் ௨௦-வருடங்களுக்கு முன்னர் பவுண்டு ரப்பர் ௧௦-ஷில்லிங் விற்றுக்கொண்டிருந்தது. அக்காலத்தில் ரப்பர்த் தோட்ட முதலாளிகளுக்கு ராஜயோகம் அடித்ததென்றே கூறவேண்டும். ஒவ்வொரு சொட்டு ரப்பர் பாலும் பொன் எனக் கருதப்பட்டது. பதுக் காடுகள் தினந்தோறும் நூற்றுக்கணக்கான ஏக்கர் அளவில் அழிக்கப்பட்டு ரப்பர் மரங்கள் நடப்பட்டன. மாதம் ௧௦௦௦-டன்கள் உற்பத்தி செய்யப்பட்டு இரண்டு முதல் நாலாயிரம் டன்கள் வரை ஏற்றுமதி செய்யப்பட்டது. படிப்படியாக உயர்வடையத் தொடங்கி இப்போதும் மாதம் சுமார் ௪௦-ஆயிரம் டன்கள் உற்பத்தி செய்யப்பட்டு ௫௦-ஆயிரம் டன்கள் வரையில் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அக்காலத்தில் ரப்பர்த் தோட்ட முதலாளிகள் நூற்றுக்கு எண்ணூறு, சில சமயங்களில் ௧௦௦௦ வீதம் கூட லாபம் பெற்றனர். இவ்வளவு உயர்ந்த வருவாயைக் கொடுத்துக்கொண்டிருந்த இந்த விளைபொருள் காலகதியால் க்ஷீணமடைந்து இப்போது ஆறுபென்ஸ் விகிதத்திற்கு இறங்கிவிட்டது. அதாவது ௧௯௧௦-ம் ஆண்டில் விற்ற விலையில் இருபதில் ஒரு பங்கு தான் விற்றுக்கொண்டிருக்கிறது. இதற்கு முக்கிய காரணம் முதலாளிகள் யாவரும் உற்பத்தியை அதிகரிக்க நினைவுகொண்டனரேயன்றி அந்தச் சரக்கை எவ்விதம் அழிப்பது என்பதைப்பற்றி யோசிக்கவில்லை இவ்விதம் மாதந்தோறும் உற்பத்தி அதிகரித்து அழிவு குறைவுபட்டமையால் இன்று தினம் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் முறையே அ௦-ஆயிரம் டன்னும் உ௫ (?) ஆயிரம் டன்களும் இருப்பு இருப்பதாகக் கூறப்படுகிறது. இந்த இருப்புகள் மே மாதம் ௩௧-ந் தேதியன்று அருந்தனவென்றும் ஏறக்குறைய இது சரியான மதிப்பென்றும் கருதப்படுகிறது. மே மாதம் முழுவதும் மலாய்நாடுகள், டச்சு இந்தியத் தீவுகள் முதலான எல்லா விடங்களிலும் உள்ள ரப்பர் தோட்டங்களும் ரப்பர் இருப்புகளைக்குறைக்கும் நோக்கத்துடன் பால் வெட்டுகளை நிறுத்தின. ஆயினுந்தோட்டங்களில் கைவசமிருந்த ரப்பர் இருப்புகள் யாவும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பால் வெட்டுகள் நிறுத்தப்பட்டமையால் வெட்டுக் கூலிகளுக்கு வேறு வேலைகள் கொடுக்கப்பட்டன. ஏற்றுமதி விஷயத்தில் அதிக ஊக்கம் செலுத்தப்பட்டது. அதன் பயனாக முன்னர் ஒருபோதும் மலாயாவினின்றும் ஏற்றுமதி செய்யப்பட்டிராத அளவிற்கு ரப்பர் ஏற்றுமதி செய்யப்பட்டது. சென்ற மாதம் முழுவதிலும் மலாயாவின் எல்லாத் துறைமுகங்களிலுமாகச் சேர்ந்து சுமார் ௬௧ ஆயிரம் டன்கள் ரப்பர் கப்பலேற்றப்பட்டது. ஏற்கனவே அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் மலைபோல் உறைந்து கிடக்கும் இருப்புகளுடன் இந்தப் பிரமாண்டமான இருப்புகளும் போய்ச் சேர்ந்துகொண்டதன் காரணமாக இம்மாதம் ஆரம்பமுதல் மீண்டும் ரப்பர் விலை குறைய ஆரம்பித்துவிட்டது. சென்ற மாதம் முடிவில் லண்டனில் எழு பென்சும் சிங்கப்பூரில் ௨௩-செண்டும் விற்றுக்கொண்டிருந்த தானது இப்போது லண்டனில் ௬ பென்சும் சிங்கப்பூரில் ௧௧-செண்டும் ஆக இறங்கி விட்டது. சிங்கப்பூர் ரப்பர் கம்பெனி வியாபாரிகள் சிலர் ரப்பர் ௧0 காசுக்கு இறங்குமென்று ஜோஸ்யம் கூறுகின்றனர். லண்டன் பிரபல மோட்டார் டயர் கம்பெனியாராகிய டன்லப் கம்பெனியார் ௫ பென்சுக்கு இறங்கினுல் அது ஆச்சரியப்படக்கூடியதல்லவென்று முன்னமே வெளியிட்டிருக்கின்றனர்.

இப்போதைய நிலைமையிலேயே அநேக ரப்பர்த் தோட்ட முதலாளிகள அசலுக்கும் கட்டக்கூடாத நிலைமையில் உற்பத்தி செய்யவேண்டியவர்களாயிருக்கின்றனர். இன்னும் ௧0 காசுக்கு இறங்கிவிட்டால் சிறிய தோட்டங்கள் எல்லாம் அநேகமாக மூடப்படவேண்டியிருக்கும். பெரிய தோட்டங்கள் தங்கள் கூலிகளைக் குறைத்து வேலையில் வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு இரட்டிப்பு வேலை கொடுத்து நிலைமையை சமாளித்துக்கொள்ளலாம். ஆனல் சிறிய முதலாளிகளும் மலாய், இந்தியர், சீனர் முதலிய தோட்ட முதலாளிகளும் உற்பத்தியை நிறுத்தவேண்டியதாக ஏற்படும். பல தோட்டங்களில் வேலை நிறுத்தம் ஏற்பட்டால் கூலிகள் வேலையில்லாமல் சம்பாத்தியமில்லாமல் திண்டாடித் தவிக்க நேரிடும். நாடெங்கும் கொள்ளையும் திருட்டும் வழிப்பறிகளும் அதிகப்பட்டுவிடும். இவ்வித சங்கடமான நிலைமையை இப்போதைய ரப்பர் விலை ஏற்படுத்திவிட்டது. ௧௯௨௨-ம் ஆண்டில் நாடுகடத்தப்பட்ட ரப்பர் கட்டுப்பாடு இதற்குத் தகுந்த பரிகாரத்தை அளிக்கக்கூடும். ஆயினும் இதுவரை மலாய அதிகாரவர்க்கத்தினர் அதைப்பற்றி யோசித்திருப்பதாகக் காணப்படவில்லை.

ஈயத்தின் நிலைமையும் இவ்வாறேயிருந்து வருகிறது. லண்டன் நகரத்தில் உள்ள ஈயச் சுரங்கங்களின் முதலாளிகள் சங்கத்தார் ஈய உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் எல்லா சுரங்கங்களும் தங்களுடைய பூரண சக்தியில் நூற்றுக்கு எண்பதுக்கு மேற்பட்டு உற்பத்தி செய்யக்கூடாதென்று ஒரு கட்டுப்பாட்டை சிறிது காலத்திற்கு முன்னர் ஏற்படுத்தினர். மற்ற நாடுகளில் உள்ள ஈயச் சுரங்க முதலாளிகள் அந்தத் திட்டத்தை எவ்விதம் அனுட்டித்தார்களென்று தெரியாவிட்டாலும் மலாயா சுரங்க முதலாளிகள் அதை கொஞ்சமும் பொருட்படுத்தவில்லை யென்பது சென்ற மாதம் மலாயாவினின்றும் கப்பலேற்றி அனுப்பப்பட்ட ஈயத்தின் புள்ளி விபரங்கள் மூலம் வெளியாகின்றது. சென்ற ஜனவரி முதல் ஏப்ரல் வரையில் பிரதிமாதமும் ஏற்றுமதிகள் எழு அல்லது எட்டு ஆயிரம் டன்களே செய்யப்பட்டிருக்க மே மாதத்தில் ௧௦ ஆயிரம் டன்களுக்கு மேற்பட்டு செய்யப்பட்டிருக்கின்றது. இதனல் சென்ற வாரத்தினிறுதியில் ஒரு டன் ௧௩௦ பொன்னுக்கு அருகில் இறங்கிவிட்டது. இந்த விலையில் பல சிறிய சுரங்கங்கள் வேலை செய்ய முடியாது. ஆயினும் அதிருஷ்டவசமாக இவ்விடத்தில் மீண்டும் சற்று உயர்ந்து இப்போது ௧௩௦ பொன் வரையில் விற்றுக்கொண்டிருக்கிறது. லண்டனிலுள்ள ஈயச்சுரங்க முதலாளிகள் ரப்பர்த்தொழிலைக்காப்பாற்றும்பொருட்டு இரண்டு மாதங்களுக்கு எல்லா சுரங்கங்களும் உற்பத்தியை நிறுத்திவிட வேண்டுமென்று ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியிருப்பதாக ஒரு செய்தி கிடைத்திருக்கிறது. இவ்விதம் நிறுத்தப்பட்டால் மலாய்நாட்டில் லட்சக்கணக்கான சீனக் கூலிகளுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படும். இப்பொழுதே பலவிடங்களில் கொள்ளைகள் அதிகரித்துவிட்டன. ஈபோவுக்கு அருகில் உள்ள கம்பார் என்னுமிடத்தில் ஒரு சீனகனவானை சில திருடர்கள் பிடித்துச் சென்று மறைவான இடத்தில் வைத்துக்கொண்டு பத்தாயிரம் வெள்ளி கொடுத்தாலன்றி விடுதலை செய்வதில்லையென்று பயமுறுத்தி வருகின்றனர். ஈபோ நகரில் சில நகரத்தார்கள் விசாகம் திருவிழாவைப் பார்க்கப் போயிருந்த சமயத்தில் சில திருடர்கள் ஒரு செட்டியாரின் வீட்டில் புகுந்து பெட்டியை உடைத்து அதில் வைக்கப்பட்டிருந்த ௩௦௦ வெள்ளி ரொக்கத்தைப் பெடுத்துக்கொண்டு கம்பி நீட்டிவிட்டனர். மற்றும் காஜாங் அருகில் ஒரு ரோட்டில் இரவில் தடையை வைத்து ஒரு மோட்டார் வண்டியை வழிமறித்து அதிலிருந்த ஒரு செட்டியார் உள்ளிட்ட பல பிரயாணிகளிடமிருந்த உடைமைகளையும் பெட்டிகளையும் சீனத் திருடர்கள் திருடிச் சென்றுவிட்டதாகக் கூறப்படுகிறது. ரப்பரும் ஈயமும் விலை குறைந்திருக்கும்போதே இவ்வளவு வழிப்பறிகள் நடக்கால் இன்னும் பூராவாக வேலைநிறுத்தம் செய்துவிட்டால் ஏற்படக்கூடிய அனர்த்தங்கள் கணக்கிலடங்கா. ஆகையால் இதில் திடீரென்று உற்பத்தி முழுவதையும் நிறுத்திவிடுவது மலாயா முழுவதற்கும் பெரும் ஆபத்தாகவே முடியும். அதிகாரிகளின் மனோபாவம் அறியக்கூடாததாகயிருக்கிறது.

### தொழிலாளர் சம்பளத்திற்கு ஆபத்து.

மலாயாநாட்டில் ஐக்கியப்பட்ட மாகாணங்கள் நான்கு. சிலாங்கூர், பேரா, நெகிரி செம்பிலான், பாஹாங் ஆகிய நான்கும் ஐக்கியப்பட்டு பிரிட்டிஷாரின் மேற்பார்வையிலிருந்து வருகின்றன. கெடா, ஜோகூர், பெர்லிஸ், கெலந்தான், டிரெங்கானு ஆகிய நான்கும் ஐக்கியமடையாத சுயேச்சைநாடுகள். இவை பிரிட்டிஷ் ஆளுகைக்காவது மேற்பார்வைக்காவது உட்பட்டவை அல்ல. ஆயினும் ஜோகூரிலும் கெடாவிலும் உள்ள ரப்பர்த் தோட்டங்களில் இந்தியக் கூலிகளே வேலைக்கு அமர்த்திக்கொள்ளப்படுகின்றனர். கெடா, பாஹாங், ஜோகூர் ஆகிய மூன்று நாடுகளும் அடர்ந்த காடுகள் நிரம்பியவை. மலேரியா சுரத்திற்கு அவைகளே உற்பத்தி ஸ்தானமாகும். இவை மூன்றும் சமுத்திரக்கரையினின்றும் தூரத்தில் உள்நாட்டில் இருக்கின்றன. வெகு தூரத்திலிருப்பதாலும் அடிக்கடி அந்த கூலிகள் நோய் வாய்ப்படுவதையும் உத்தேசித்து இரண்டு வருடங்களுக்கு முன்னர் இந்தியன் இம்மிகிரேஷன் கமிட்டியார் அவ்விடங்களில்வேலை செய்யும் இந்தியக் கூலிகளுக்கு ஆண்களுக்கு ௫0 காசும் ஸ்திரீகளுக்கு ௪௧ காசும் கூலிகொடுக்க வேண்டுமென்ற நிர்ணயத்தை ஏற்படுத்தினர்கள். அவ்வண்ணமே இதுவரையில் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது கெடா ஜில்லாவில் உள்ள சில தோட்டக்காரர்கள் இதை எதிர்த்துப் போராடத் தொடங்கியிருக்கின்றனர். இம்மிகிரேஷன் கமிட்டியார் சம்பள நிர்ணயம் ஏற்படுத்திய போதிருந்த விலையைக் காட்டிலும் இப்போது உணவுப் பொருள்கள் விலையில் குறைந்து போய்விட்டதாயும் கூலிகளின் சுகாதாரம் திருந்திப் போய்விட்டதாயும் அவர்கள் காய்கறி தோட்டங்கள் போட்டு அதிக வருமானம் சம்பாதிப்பதாயும் அதிக சம்பளம் கொடுக்கப்படுவதால் சரியானபடி வேலைக்கு வருவதில்லையென்றும் ஒரு மாதத்திற்குச் செலவுக்கு வேண்டிய பணம் சேருமட்டும் வேலைக்கு வந்துவிட்டு பாக்கி நாட்களை சோம்பேறித்தனமாகஉல்லாசத்தில்கழித்துவிடுவதாகவும்அதனுல் குடிப்பழக்கம் அதிகம் ஏற்படுவதாகவும், ஆகையால் அவர்கள் கூலியைக்குறைக்கும்படி இம்மிகிரேஷன் கமிட்டியாரை மலாயா தோட்டக்காரர் சங்கத்தின் மூலம் கேட்டுக் கொள்ள வேண்டுமென்றும், கெடா ஜில்லா தோட்டக்காரர் சங்கத்தினரால் தீர்மானிக்கப்பட்டு பாஹாங் ஜில்லா தோட்டக்காரர் சங்கத்தின் அபிப்பிராயத்திற்கு அனுப்பப்பட்டது. அதன் மீது பிஹாங் தோட்டக்காரர் சங்கத்தார் கூட்டம் கூடி யோசித்து அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று தீர்மானித்தனர்.

இந்நாட்டில் இந்தியக் கூலிக்காரன் கதி கேர்க்கதியாகத்தான் இருக்கின்றதென்று சொல்ல வேண்டும். என்னதான் இந்தியா ஏஜண்டும் சஞ்சி இலாகாவும் அவனுடைய உதவிக்கு இருந்தாலும்வெள்ளைக்காரர்களுடைய கட்டுப்பாடு மிகவும் வலுவுள்ளதாயிருக்கிறது. மலாய்நாடு முழுவதும் இந்தியத் தொழிலாளர்களின் க்ஷேமக்ஷேமங்களை விசாரித்து இந்தியா ஏஜண்டுக்குத் தனிப்பட்ட ஒரு காரியாலயம் இல்லாமல் ஜாவாதெருவில் ஒரு கம்பெனிக்குச்சொந்தமான காரியாலயம் வைக்கப்பட்டிருக்குமானல் இந்தியத் தொழிலாளர்களின் பரிதாபநிலைமையையும் அவர்களுடைய க்ஷேமக்ஷேமங்களும் இந்தியாவின் பிரதிநிதி யென்றும் விளங்கும் இந்தியா ஏஜண்டின் நிலைமையையும் என்னென்று கூறுவது!

—

